**பரகதி** - முத்தி.
**பரகீயம்** - பிறர்க்குரியது.
**பரக்குதல்** - அலைந்து திரிதல்.
**பரசிரம்** - யாவருமறிந்தது.
**பரசு** - மழு; கோடாரி; மூங்கில்.
**பரசுதல்** - துதித்தல்.
**பரடு** - காடு; கணு.
**பரட்டையம்** - ஒட்டுச் சல்லடம்.
**பரணி** - ஒருநாள்; போர்க்களம் பாடும் பிரபந்த வகை; சாந்துச் செப்பு.
**பரண்** - காவலிருக்கை; மேற்றட்டு.
**பரதம்** - கூத்து; ஒரு பேரெண்.
**பரதர்** - வணிகர்; கூத்தர்; கடலோடிகள்.
**பரதவர்** - நுளையர்; நெய்தனிலமக்கள்; தென்திசைக குறுநில மன்னர்.
**பரதவித்தல்** - வருந்துதல்; இரங்குதல்.
**பரத்தல்** - பரவுதல்; தட்டையாதல்; அலமருதல்.
**பரத்துதல்** - விரித்தல்.
**பரந்தை** - பொதுமகள். வேற்றுப்பெண்; அயன்மை.
**பரந்தாமன்** - திருமால்.
**பரபக்கம்** - பிறர் பக்கம்.
**பரபத்தியம்** - கொடுக்கல் வாங்கல்.
**பரப்புதல்** - பார்த்தல்.
**பரமண்டலம்** - வானுலகம்; அன்னிய நாடு.
**பரமபதம்** - மோட்சம்.
**பரமம்** - திவ்வியம்; சிறப்பு; முதற்கடவுள்.
**பரமன்** - கடவுள்.
**பரமார்த்தம்** - மேலான பொருள்; உண்மையறிவு; மோட்சம்.
**பரம்** - மேலானது; மேலுலகம்; அன்னியம்; கடவுள்; சார்பு; உடல்; கேடகம.
**பரம்பரை** - தலைமுறைத் தொடர்பு.
**பரம்பு** - உழுத கழனியைச் சமப்படுத்தும பலகை; பரவிய நிலம்; வரம்பு.
**பரம்புதல்** - பரவுதல்; நிறைதல்.
**பரல்** - பருக்கைக்கல்; சுக்கான் கல; விதது.
**பரவர்** - கடற்கரை மக்கள்.
**பரவுதல்** - போறறுதல்; புகழ்தல்; துதித்தல
**பரவை** - பரபபு; கடல்; ஆடல்.
**பரவை வழக்கு** - உலக வழக்கு.
**பரன்** - மேலானவன்; கடவுள், அன்னியன்; ஆன்மா.
**பரஸ்பரம்**- ஒனறுக்கொன்று; ஒருவருக்கொருவர்.
**பரா** - மிகுதி.
**பராகம்** - தூளி; மகரந்தம்.
**பராக்கிரமம்** - வீரம்; வல்லமை.
**பராக்கு** - கவனமின்மை; சாக்கிரதையைக குறிக்கும் சொல்.
**பராங்குசன்** - எதிரிகளுக்கு அங்குசம் போனறவன்; நம்மாழ்வார்.
**பராதீனம்** - சுதந்திரமின்மை.

**பராபவம்** - தோல்வி; அபசாரம்.
**பராமரித்தல்** - ஆதரித்தல்; ஆலோசித்தல்.
**பராமுகம்** - அலட்சியம்.
**பராரி** - ஓடிப்போனவன்.
**பராரை** - பருத்த அடிமரம்.
**பரார்த்தம்** - பிறர்பொருட்டானது; ஆயிரங் கோடாகோடி.
**பராவணம்** - துக்கப்படும் பொருள்.
**பராவுதல்** - வணங்குதல்; புகழ்தல்.
**பரி** - செலவு; குதிரை; அதிசயம்; (விடுதல்; மிகுதி; சூழல்; சிறப்பு; மகிழ்ச்சி; கோபம் முதலிய பொருளுணர்த்தும் ஓர் இடைச்சொல்.)
**பரிகரம்** - துணைக்கருவி; சேனை; குழு.
**பரிகரித்தல்** - நீக்குதல்; கடத்தல்.
**பரிகலம்** - குருமார் உண்கலம்; பரிவாரம்.
**பரிகாரம்** - மாற்றுமுபாயம்; பொருள்கள்.
**பரிகாரி** - வைத்தியன்.
**பரிகை** - மதிலுண் மேடை; அகழி.
**பரிக்காரர்** - குத்துக்கோற்காரர்.
**பரிக்கோல்** - குத்துக்கோல்; தோட்டி.
**பரிசம்** - தொடுகை; சீதனம்.
**பரிசனம்** - பரிவாரம்; ஏவலாளர்; சுற்றம்.
**பரிசனவேதி** - பொன் செய்யு மூலிகை.
**பரிசாரகம்** - ஏவற்றொழில்; வணக்கம்; சமையற்றொழில்.
**பரிசிலர்** - கூத்தர்; ஏற்றுண்டு வாழ்வோர்.
**பரிசில்** - கொடை; தியாகம்.
**பரிசு** - நன்மை; விதம்; கொடை; பெருமை.
**பரிசுத்தம்** - மிகத் தூய்மை; துப்புரவு.
**பரிசை** - கேடகம்.
**பரிச்சயம்** - பழக்கம்.
**பரிச்சேதம்**-எல்லை; முழுமை.
**பரிணதன்** - கற்றோன்.
**பரிணமித்தல்** - நிலைமாறுதல்.
**பரிணயம்** - விவாகம்.
**பரிணாமம்** - இயற்கையினின்றும் திரிதல்.
**பரிதல்** - இரங்குதல்; வருந்துதல்; ஓடுதல்; பகுத்தறிதல்; அறுததல்; அழித்தல்.
**பரிதாபம்** - பெருந்தாகம்; இரக்கம்.
**பரிதானம்** - இலஞ்சம்.
**பரிதி** - பரிவேடம்; சூரியன்; தேருருளை; சக்கராயுதம்.
**பரித்தல்** - சுமத்தல்; பாதுகாத்தல்; தரித்தல்; அறுத்தல்; சூழ்தல்; ஓடுதல்.
**பரித்தியாகம்** - முற்றுந் துறத்தல்.
**பரித்திராசம்** - பெரும் பயம்.
**பரிபவம்** - எளிமை; அவமானம்.
**பரிபாகம்** - முதிர்ச்சி; பக்குவம்; சமக்கை.
**பரிபாலனம்** - பாதுகாப்பு.

**பரிபாஷை** - குறியீடு; குழூஉக் குறி.
**பரிபுரம்** - சிலம்பு.
**பரிப்பு** - இயக்கம்; தாங்குகை.
**பரிமளம்** - மிகுமணம்.
**பரிமா** - குதிரை.
**பரிமாணம்** - அளவு.
**பரிமாறுதல்** - உணவு படைத்தல்; மாற்றிக்கொள்ளுதல்.
**பரிமுகமாக்கள்** - கின்னரர்.
**பரிமுகவம்பி** - குதிரைமுக வோடம்.
**பரிமேயம்** - அளவுபட்டது.
**பரியகம்** - பாதகிண்கிணி.
**பரியங்கம்** - கட்டில்.
**பரியம்**-மணப்பரிசு; முலைவிலை.
**பரியாயம்** - ஒத்த பொருளுடையது.
**பரியாளம்** - பரிவாரம.
**பரிவட்டம்** - கடவுளாடை.
**பரிவருத்தனை** - பண்ட மாற்றுகை.
**பரிவாரம்** - சூழ்படை.
**பரிவு** - அன்பு; இரக்கம்.
**பரிவேடம்** - ஊர்கோள் வட்டம்.
**பரிவேட்பு** - வட்டம.
**பரிஷ்காரம்** - விமரிசை; தெளிவு; உறுதி.
**பரீஇ** - வருத்தி.
**பருகுதல்**-குடித்தல்; உண்ணுதல்.
**பருணன்** - நிருவகிப்பவன்.
**பருணிதன்** - புலவன்.
**பருதி** - தேருருள்; வட்டம்; சூரியன்.
**பருந்தாட்டம்** - பெருந்துன்பம்.
**பருப்பதம்** - மலை.
**பருப்பு** - துவரை முதலியவற்றின் உள்ளீடு; பருமை.
**பருப்பொருள்** - பிண்டப் பொருள்.
**பருமம்** - கல்லணை; அரைப் பட்டிகை; யானைக்கழுத்திடு மெத்தை; ஒரு மேகலை; பருமை.
**பருமித்தல்** - அலங்கரித்தல்; படைககலம் பயிலுதல்.
**பருவதம்** - மலை; மீன்வகை.
**பருவம்** - தக்க காலம்; முழு நிலா நாள்.
**பருவதாரி** - இந்திரன்.
**பருவரல்**-துனபம; பொழுது.
**பருவி** - பருத்தி.
**பரூஉ** - பருமை.
**பரூஉக்கை** - வண்டியினோருறுப்பு.
**பரேர்** - மிக்க அழகு.
**பரை** - சிவசக்தி.
**பரோட்சம்** - கண்ணுக்கெட்டாதது.
**பரோபகாரம்** - பிறர்க்குதவி.
**பர்ணசாலை** - இலைக்குடில்.
**பர்த்தா** - கணவன்.
**பலகணி** - சாளரம்.
**பலகை** - கேடகம்.
**பலம்** - பழம்; பயன்; வலி; படை; உறுதி; உடைநெற்றி.
**பலாகம்** - கொக்கு.
**பலாசம்** - பலா; புனமுருக்கு; இலை; பசுமை.
**பலாயனம்** - புறங்காட்டுகை.
**பலாலம்** - வைக்கோல்.
**பலி** - பலிச்சோறு; பலியுயிர்; பிச்சை; அருச்சனைப் பூ; சாம்பல்; காக்கை.

**பலிசை** - இலாபம்; வட்டி.
**பலிதை** - கிழவி.
**பலுகு** - பயிர்களைப் பெயர்க்கும காறுமரம்.
**பலுக்குதல்** - பேசுதல்; தெளிய உச்சரித்தல்.
**பல்காழ்** - மேகலை.
**பல்காழ்பறவை** - வண்டு.
**பல்குதல்** - பலவாதல; மிகுதல்.
**பல்லணம்** - குதிரைக்கல்லணை.
**பல்லம்** - கரடி; அம்பு; ஒரு பேரெண்.
**பல்லவம்** - ஒருநாடு; தளிர்; அம்பு.
**பல்லாண்டு** - பலவாண்டு; வாழ்த்து.
**பல்லி** - உழுகருவி; வண்டியுறுப்பு; ஓர் உயிரவகை.
**பல்லியம்** - பல வாத்தியம்.
**பல்லுறைப்பை** - பல அறைகளையுடைய பை.
**பல்லூழ்** - பல தடவை.
**பல்வலிப்பறவை** - சரபம்.
**பவகாரணி** - அழகர்மலைப் பொய்கை.
**பவஞ்சம்** - பிசபஞ்சம்.
**பவனம்** - நாகலோகம்.
**பவதி** - பார்வதி.
**பவத்தல்** - தோன்றுதல.
**பவம்** - பிறப்பு; உலகம்; பாவம்.
**பவர்** - கொடிக்கூட்டம்; பாவிகள்; நெருக்கம்.
**பவர்தல்** - கூடுதல்; நெருங்கியிருத்தல்.
**பவனம்** - காற்று; வீடு; பூமி; சுவர்க்கம்; விமானம்.
**பவனி** - உலாவருகை.
**பவன்** - சிவபிரான்; கடவுள்.
**பவானி** - பார்வதி; ஒரு நதி.
**பவித்திரம்** - மிகு சுத்தம்; தருப்பை மோதிரம்; பூணூல்; நெய்; தேன்.
**பவிஷயம்** - எதிர்காலம்.
**பவுஞ்சு** - சேனை.
**பவுரி** - கூத்துவகை.
**பவ்வம்** - கடல்; நுரை
**பழங்கண்** - துன்பம்; மெலிவு.
**பழவடியார்** - வழித்தொண்டர்.
**பழவிறல்** - பழைய தன்மை.
**பழனம்** - வயல்; பொய்கை.
**பழிச்சுதல்** - வாழ்த்துதல்; வணங்குதல்.
**பழு** - விலா; பேய்; ஏணியின படிச்சட்டம்.
**பழுக்காய்** - பாக்கு; மஞ்சள் கலந்த செந்நிறம்.
**பழுது** - உடம்பு; குற்றம்; சிதைவு; பயனின்மை.
**பழுதை** - வைக்கோற்புரி; கயிறு.
**பழுமணி** - மாணிக்கம்.
**பழுமரம்** - பழுத்தமரம்; ஆலமரம்.
**பழுப்பு** - அரிதாரம்; பொன்னிறம்.
**பழுவம்** - காடு; கூட்டம்.
**பழுனுதல்** - முதிர்தல்; முடிவடைதல்.
**பழை** - கள்.
**பழையர்** - கள் விற்பவர்.
**பழையோள்** - காடுகிழாள்; காளி.
**பளகம்** - மலை; பவளம்.

**பளகு-குற்றம்** ; மூடத்தனம.
**பளக்கு** - கொப்புளம்.
**பளிக்கு** - பளிங்கு.
**பளிங்கு** - கண்ணடி ; கர்ப்பூரம.
**பளிதம்** - பச்சைக் கர்ப்பூரம் ; பச்சடி ; பாற்சோறு, ஒரு பேரெண்.
**பள்குதல்** - பதுங்குதல்.
**பள்ளர்** - உழவர்.
**பள்ளி** - சிற்றூர் ; இடைச்சேரி; முனிவரிருக்கை; புத்தன்கோயில்; வேலைச்சாலை ; படுக்கை ; பள்ளிக்கூடம் ; வனனியன் ; குறுமபன்.
**பள்ளித்தாமம்** - கோயிலிற் சாத்தும மாலை.
**பள்ளியந்துலா** - படுகைகைப் பல்லககு; சயன தண்டிகை.
**பள்ளியெழுச்சி** - தூக்கம் விட்டெழுதல்.
**பள்ளையம்** - சிறுதெய்வ ஆராதனை; உண்கலம்.
**பறட்டை** - வளர்ச்சியற்றது.
**பறண்டை** - ஒரு வாத்தியம் ; கையின் முட்டி.
**பறந்தலை** - பாழிடம; புறங்காடு ; சுடுகாடு ; போர்களம்; படை வீடு.
**பறப்பன்** - தேள் ; அவசரக்காரன்.
**பறப்பை** - பறவை ; யாக வேதிகை; நெய்மரவை.
**பறம்பர்** - தோல்வேலை செய்பவர்.
**பறம்பி** - மோசக்காரி.
**பறம்பு** - ஒருமலை.
**பறம்புதல்** - அடித்தல்.
**பறவாப்புள்**-சொல்நிமித்தம்.
**பறல்** - பறவை.
**பறழ்** - அணில், நாய், பன்றி ; புலி முதலியவற்றின் குட்டி.
**பறளை** - குறடு ; பற்றிரும்பு ; தகடு.
**பறி** - கொள்ளை ; மீன்பிடி கருவி; ஓலைப்பாய; உடம்பு; பொன்.
**பறிதல்** - வெளிப்போதல் ; கட்டவிழ்தல் ; உணடாதல்.
**பறித்தல்** - நீக்குதல ; அழித்தல; பிடுங்குதல.
**பறிமுறை** - பல வீழ்ந்து முளைத்தல.
**பறை** - வாத்தியம் ; பறவை ; சிறகு ; அழிகை.
**பறைதல்** - சொல்லல்; தேயதல ; அழிதல்.
**பறைத்தல்** - சொலலுதல்; நீககுதல்.
**பறையலகு** - பலகறை.
**பற்குனன்** - அருச்சுனன்.
**பற்சன்னியன்** - வருணன.
**பற்பதம்** - பருவதம்.
**பற்பம்** - தாமரை; தூள்.
**பற்றம்** - கற்றை ; கூட்டம்.
**பற்றலர்** - பகைவர்.
**பற்றுக்கை**-அம்புகள் கட்டுங் கயிறு.
**பற்றுசு** - பற்றுக்கோடு ; உலோகங்கள் பொருந்த வைககும் பொடி.
**பற்று**-ஆசை; அனபு; விருப்பு; வாரப்பாடல்; வயல்; நட்பு; செல்வம்.
**பற்றுக்கோடு** - ஆதாரம்; கடடுத்தறி.
**பற்றுள்ளம்** - உலோபம்.

**பற்றை** - சிறுதூறு; செங்காந்தள்.
**பனசம்** - பலா; முள்.
**பனத்தி** - பார்ப்பனத்தி.
**பனம்புடையல்** - பனைமாலை.
**பனவன்** - பார்ப்பான்.
**பனாட்டு** - பனம்பாகு.
**பனி** - பனி; நீர்த்துளி; குளிர்ச்சி; கண்ணீர்; இனிமை; அச்சம்; துன்பம்; நடுக்கம்.
**பனிச்சை** - பெண் மயிர் முன் முடிச்சு.
**பனித்தல்**-நடுங்கல்; வடிதல்; வருந்துதல்; அடித்தல்.
**பனிற்றல்** - தூவல்.
**பனுவல்**-பஞ்சி நூல்; சொல்; பாட்டு; நூல்; கல்வி; அறநூல்; எஃகுறு பஞ்சு; ஆராய்ச்சி.
**பனுவலாட்டி** - கலைமகள்.
**பன்** - அரிவாட் பல்.
**பன்றிப்பத்தர்** - பன்றிக் கூழ்த்தொட்டி.
**பன்னகம்** - இலை; பாம்பு.
**பன்னல்** - பருத்தி; சொல்; ஆராய்கை.
**பன்னி** - பத்தினி.
**பன்னுதல்** - ஆராய்தல்; புகழ்தல்; பின்னுதல்; நின்று நின்று சொல்லுதல்; பஞ்சு ஆய்தல்.

## பா

**பா** - பாட்டு; நெசவுப்பா; பரப்பு; கைமரம்; பஞ்சி நூல்; தூய்மை; காப்பு.
**பாகசாதனன்** - இந்திரன்.
**பாகசாதனி** - அருச்சுனன்.
**பாகடை** - பாக்கு வெற்றிலை.
**பாகதம்** - பிராகிருதம்; ஒரு மொழியின் மூலம்; வடமொழித் திரிவு.
**பாகம்** - சமையல்; பக்குவம்; செய்யுள்நடை; பங்கு; பக்கம்; பறைவகை.
**பாகல்** - ஒருகொடி; பலா.
**பாகர்** - தேரின் மேற்றட்டுக கைப்பிடி; தேர்ப்பாகர்.
**பாகவதர்** - வைணவப் பெரியார்; இசையுடன் சமயக கதைகள் சொல்வோர்.
**பாகன்**-பக்குவம் பெற்றவன்; ஓட்டுபவன்.
**பாகிடுதல்** - பிச்சையிடுதல்.
**பாகித்தல்** - பங்கிடுதல்.
**பாகு** - வெல்லப்பாகு; பாக்கு; பகுதி; பிசைை; பாகன்; திறன; அழகு; பாகை; கரை.
**பாகுபாடு** - பகுப்பு.
**பாகுடம்** - அரசிறை; கையுறை.
**பாகுடி** - வெகுதொலை.
**பாகை** - வட்டச்சிறு பகுதி; தலைப்பாகை.
**பாக்கம்** - மருதநிலத்தூர்; பட்டினம்; அரசனிருக்கை; கடற்கரையூர்; பக்கவூர்.
**பாக்கியம்** - நல்வினை; செல்வம்.
**பாக்கு** - அடைக்காய்; (எதிர்கால வினையெச்ச விகுதி, தொழிற்பெயர் விகுதி.)
**பாக்கை** - பாக்கம்.
**பாங்கர்** - பாங்கு.

**பாங்கு** - பக்கம்; நன்மை; தன்மை; தோழமை; அழகு; உரிமை; தகுதி; பணஞ் சேர்ப்பிடம்.
**பாசகர்** - மடையர்.
**பாசடை** - பச்சிலை.
**பாசண்டம்** - புறச் சமயக் கொள்கை.
**பாசம்** - கயிறு; வியூகவகை. தளை; அன்பு; சுற்றம்; பேய்;
**பாசவர்** - இலைக்கறி; இறைச்சி; கயிறு ஆகிய இவை விற்போர்.
**பாசவல்** - பசிய அவல்; பசிய விளைநிலம்.
**பாசறை** - படைவீடு; இலை செறிந்த முழை; துன்பம.
**பாசனம்** - வெள்ளம்; பாத்திரம்; சுற்றம்; மரக்கலம.
**பாசி** - பசுமையுடையது; நீர்ப்பாசி; கிழக்கு; கருமணி.
**பாசிலை** - பசசிலை; வெற்றிலை.
**பாசினம்** - கிளிக்கூட்டம்.
**பாசு** - பசுமை; மூங்கில்; பாசம்; தைரியம்; கிளி.
**பாசுணம்** - பக்கம்.
**பாசுபதம்** - சிவன் கணை; ஒரு சிவமதம்
**பாசுரம்** - திருப்பாடல்; திருமுகம்.
**பாச்சிகை** - சூதாடு கருவி.
**பாஞ்ச சன்னியம்** - திருமாலின் சங்கம்; தீ; நாணல்.
**பாஞ்சராத்திரம்** - ஒரு வைணவ ஆகமம்
**பாஞ்சாலிகம்** - பொம்மலாட்டம்.
**பாடகம்** - மகளிர் காலணி; பாடுமிடம்; துகில் வகை; சிவப்பு; தெரு; நிழல்; கரை; கூலி; வயறபகுதி.
**பாடம்** - ஒளி; சொல்.
**பாடலம்** - சிவப்பு; சபதம்; குதிரை; பாதிரி.
**பாடவம்** - பாடகம்; வல்லமை; பெருமை.
**பாடி** - நகரம்; பாடி வீடு; முல்லைநிலத்தூர்.
**பாடித்தல்** - பேசுதல்.
**பாடிமிழ்வு** - ஒலித்தல்.
**பாடியம்** - பேருரை; பாஷியம்.
**பாடிவீடு** - பாசறை.
**பாடினி** - பாடுபவள்.
**பாடு** - உண்டாகுகை; முறைமை; செவ்வி; பயன்; உலகவொழுக்கம்; பெருமை; ஓசை; உழைப்பு; வருத்தம்; படுக்கைநிலை; தூக்கம்; சாவு; கேடு; பூசுகை; அத்தமனம்; பக்கம்; இடம்; வேலை.
**பாடுகிடத்தல்** - வரங்கிடத்தல்.
**பாடுதுறை** - புலவர்பாடுதற்குரிய போர்த்துறை.
**பாடுபெயல்** - விடாமழை.
**பாடுவி** - புகழ்பவள்.
**பாடை** - மொழி; பிணக்கட்டில்.
**பாட்டம்** - தோட்டம்; மேகம்; ஆசசல்; மழை; வரி; விளையாட்டுப் பகுதி; தகைமை; ஒரு மதம்.
**பாட்டி** - கிழவி; பெற்றோரின் தாயர்; பாடனமகளிர்.
**பாட்டியல்** - செயயுளிலக்கணங் கூறு நூல்.
**பாணம்** - அம்பு; ஓரங்க நாடகவகை; பூம்பட்டு.

**பாணன்** - பாடுங் குலத்தான்; வீணன்; ஒரசுரன்.
**பாணி** - செவ்வி காலம்; இசைப்பாட்டு; தாளம்; கூத்து; அழகு; கை; பக்கம்; சொல்; ஊர்; நீர்.
**பாணிக்கிரகணம்** - கைப் பற்றுதல்; கலியாணம்.
**பாணித்தல்** - தாமதித்தல்; பின்வாங்குதல்.
**பாணிமுகம்** - உடல்விட்டுயிர் போகு முறை.
**பாறு** - பாட்டு.
**பாண்** - பாட்டு; தாழ்ச்சி; பாணர் சாதி.
**பாண்டரங்கம்** - சிவம்; திரி புரக் கூத்து.
**பாண்டல்** - பழமை; துர் நாற்றம்.
**பாண்டி** - பாண்டிய நாடு; மாட்டு வண்டி; எருது.
**பாண்டித்தியம்** - கல்வித் திறம்.
**பாண்டியம்** - எருது; உழவு; பாண்டிய நாடு.
**பாண்டில்** - வட்டம்; வட்டக் கட்டில; கிண்ணி; கஞ்ச தாளம்; வண்டி; குதிரைச் சேணம; நாரை; எருது; விளக்குக் கால்; வாகைமரம்; விட்டதோல்.
**பாண்டில் விளக்கு** - கால் விளக்கு.
**பாண்டிற்காசு** - அணிவகை.
**பாண்டுகம்பளம்** - இந்திரன் ஆசனம.
**பாதகம்** - பெரும்பாவம்.
**பாதங்கம்** - பொடி; சாம்பல்.
**பாதசாலகம்** - காலணிப் பொது.
**பாதபீடிகை** - புத்தர் பாதப் படிமப்பீடம்.
**பாதவம்** - மரம்; தோப்பு; மலை.
**பாதனம்** - வணக்கம்; கீழ் முகம்.
**பாதாதிகேசம்** - அடிமுதல் தலைவரையில்.
**பாதாள மூலி** - நெருஞ்சில்.
**பாதிடுதல்** - பங்கிடுதல்.
**பாதித்தல்** - வருத்துதல்.
**பாதுகை** - மிதியடி; திருவடி நிலை.
**பாதை** - ஒற்றையடி வழி; முறை; மிதவை; துன்பம்.
**பாத்தருதல்** - பரவுதல்; உருகியோடுதல்.
**பாத்தல்** - பங்கிடுதல்.
**பாத்தி** - பகுதி.
**பாத்தியப்படுத்துதல்** - நிலை பெறச்செயதல்.
**பாத்தியம்** - உரிமை; கால கழுவுநீர்; பிணை; பங்கு.
**பாத்தியன்** - அடியான்.
**பாத்திரம்** - கடிதை; கொள் கலம; தகுதி; நடிப்போர்.
**பாத்திலார்** - வேசியர்.
**பாத்து** - இணை; நிகமம்; சோறு; ஐம்புல வின்பம்.
**பாத்துதல்** - பகுத்தல்
**பாத்தூண்** - பகுத்துண்டற் குரிய உணவு.
**பாந்தம்** - இணக்கம்; ஒழுங்கு; பகரவீறு.
**பாந்தவம்** - உறவு முறை,
**பாந்தள்** - மலைப்பாம்பு; பாம்பு.

**பாந்துதல்** - பதுங்குதல்.
**பாமம்** - புண் ; ஒளிபரப்பு ; கோபம்.
**பாமரம்** - மூடத்தனம்; இழிவு.
**பாம்புரி** - மதிலுறுப்பு.
**பாய** - பரவ.
**பாயம்** - புணர்ச்சி; விருப்பம் ; விருப்பமானது.
**பாயல்** - மக்கட் படுக்கை ; உறக்கம் ; பாதி.
**பாயிரம்** - முகவுரை.
**பாயு** - குதம்.
**பாயுரு** - எருவாய்.
**பாய்ச்சிகை** - கவறு.
**பாய்மா** - குதிரை.
**பாரங்கதன்** - கல்விக்கரை கணடவன் ; தாங்குபவன்.
**பாரணம்** - உபவாசமிருந் துண்கை; திருபதி; மேகம.
**பாரதந்திரியம்** - பிறன் வய மாதல்.
**பாரதர்** - கௌரவ பாண்ட வர்கள்.
**பாரதி** - கலைமகள் ; பண்டி தன் ; மரககலம.
**பாரதியரங்கம்** - சுடுகாடு.
**பாரபத்தியம்** - மேல் விசா ரணை.
**பாரமார்த்திகம்** - உண்மை ஞானததுக்குரியது
**பாரமேட்டி** - சிறந்த சந்நி யாசி.
**பாரம்** - சுமை; ஒரு நிறை ; பொறுப்பு ; பெருங் குடும் பம்; கரை; கவசம்; பருததிச செடி.
**பாரம்பரியம்** - பரம்பரை ; ஐதிகம்.
**பாராசாரி** - பாரிக்குதிரை.
**பாராட்டுதல்** - புகழ்தல் ; அன்பு காட்டுதல்.
**பாராயணம்** - அருள் நூலை நியமமாக ஓதுதல்.
**பாராவளை** - வளைதடி.
**பாராவாரம்** - கடல்; கடற் கரை.
**பாரி** - நல்லாடை ; ஒரு வள் ளல்; பூமி; கட்டில் ; கள் ; மனைவி; சிங்கம்.
**பாரிசம்** - பக்கம்; வசம்; திசை.
**பாரிடம்** - பூமி; பூதம்.
**பாரித்தல்** - சுமையாதல் ; சுமததுதல்; காத்தல; பரவு தல; தோன்றுதல்; வளர்த் தல்; அணிதல்; வளைத்தல்.
**பாரை** - கடப்பாரை ; செடி வகை.
**பார்** - வண்டி நெடுஞ்சட்டம்; பூமி; வன்னிலம; பாறை ; கட்டு; பருமை.
**பார்க்கவன்** - சுக்கிரன்; பரசு ராமன்.
**பார்க்கவி** - திருமகள் ; பார் வதி.
**பார்த்தசாரதி** - அருச்சுனனின் தேர்ப்பாகன்; கண்ணன்.
**பார்த்தன்** - அருச்சுனன்.
**பார்த்திபன்** - அரசன்.
**பார்ப்பனன்** - பார்ப்பான்.
**பார்ப்பு** - பறவைக் குஞ்சு.
**பார்மகள்** - பூமிதேவி.
**பார்வல்** - பார்த்தல்; காவல்; பகைவர் வருகை பார்க்கும் அரணுச்சி; பார்வைமிருகம்.
**பார்வை** - பார்த்தல; குனி யம ; பார்வை மிருகம ; மதிப்பு.

**பார்வைவிலங்கு** - விலங்கு பிடிக்கப் பழக்கிய விலங்கு.
**பாலமை** - பிள்ளைமை; அறியாமை.
**பாலம்** - பூமி; நெற்றி; வாராவதி; மழு.
**பாலனம்** - பாதுகாப்பு.
**பாலி** - பாலாறு; ஒரு பழைய மொழி.
**பாலிகை** - காதணிவகை; நவதானிய முளைத்தாழி; உதடு; கத்திப்பிடி.
**பாலை** - மணல்நிலம்; ஒரு மரம்; ஒரு பண்; நீரோட்டம்; இளம்பெண்; பிரிவு; வெப்பம்.
**பால்** - பால்; வெண்மை; சாறு; பகுதி; பக்கம்; குலம்; தன்மை; ஊழ்; பாகுபாடு; நன்னெறி; சாராயம்.
**பால்மாறுதல்** - சோம்பியிருத்தல்; பின்வாங்குதல்.
**பால்வரைதெய்வம்** - ஊழ்.
**பாவகம்** - அக்கினி; கருத்து; தியானம்; தோற்றம்; உருவம்; பரிசுத்தம்; விடகாரி; அபிநயம்; பாசாங்கு; மச்சுவீடு; மனம் முதலியவற்றோடுகூடி நின்று பாவிப்பது.
**பாவகாரி** - பாவஞ்செய்தலையே தொழிலாக வுடையவன்.
**பாவடி** - அங்கவடி.
**பாவலர்** - கவிஞர்.
**பாவறை** - கூடாரம்.
**பாவனன்** - அனுமான்; வீமன்.
**பாவனை** - நினைவு; தியானம்; அபிநயம்; கேட்டவாறு நடத்தல்.
**பாவாடம்** - நாக்கறுத்துக் கொள்ளும் பிரார்த்தனை.
**பாவாடை** - நடைச்சீலை; ஆடையன்னம்.
**பாவாணர்** - பாவலர்.
**பாவாற்றி** - நெய்வார் குச்சு.
**பாவி** - தீமையாளன்; எண்ணுதல்; சாது.
**பாவித்தல்** - எண்ணுதல்; தியானித்தல்; பாவனை செய்தல்.
**பாவை** - பதுமை; பெண்; குரவம் பூ; ஒரு நோன்பு.
**பாழி** - பெருமை; போர்; கோயில்; முனிவர் வாசம்; வலிமை; துயிலிடம்; குகை; பகைவளூர்.
**பாளிதம்** - கண்ட சருக்கரை; பாறசோறு.
**பாளை** - கருப்பருவம்.
**பாளையப்பட்டு** - பாளையக்காரருக்கு விடப்பட்ட கிராமத்தொகுதி.
**பாளையம்** - சேனை; கூடாரம்.
**பாறு** - பருந்து; கழுகு.
**பாறுதல்** - அழிதல்; ஒழுங்கறுதல்; சிதறுதல்; ஓடுதல்; துணிபடல்; நீங்குதல்.
**பாற்பட்டார்** - துறவியர்; நன்முறையில் நடப்பவர்.
**பானகம்** - இனிப்புக் குடிநீர்.
**பானம்** - குடித்தல்.
**பானல்** - கருங்குவளை; மருதவயல்.
**பானுள்** - நள்ளிரவு.
**பானு** - சூரியன்; ஒளி.
**பான்மை** - தன்மை; வயம்; இயற்கை; நல்வினைப் பயன்; ஊழ்.

**பாஷாந்தரம்** - அன்னிய மொழி.
**பாஸ்கரன்** - சூரியன்.

## பி

**பிகம்** - குயில்.
**பிக்காரி** - மறுவையாளன்.
**பிக்கு** - சிக்கு; பிசகு; தடை.
**பிக்குணி** - பௌத்தப் பெண் துறவி.
**பிங்கலம்** - பொன்னிறம்; அரிதார நிறம்; வடக்கு; ஒரு நிகண்டு.
**பிங்கலன்** - குபேரன்.
**பிங்கலை** - வலமூக்கு வழிவரும் மூச்சு; பார்வதி.
**பிங்களித்தல்** - அருவருத்தல்; பின்வாங்குதல்.
**பிங்காளம்** - பாத்திரவகை.
**பிங்குசம்** - தலைக்கோலம்.
**பிசகு** - தவறு.
**பிசி** - சோறு; விடுகதை; பொய்; நொடி; பிதிர்.
**பிசிதம்** - இறைச்சி; வேம்பு; நீறு.
**பிசிர்** - நீர்த்துளி; சிம்பு.
**பிசிர்தல்** - துளியாகச் சிதறுதல்.
**பிசுக்கர்** - அற்பர்; உலோபர்.
**பிசுக்கு** - உலோபம்; அற்பம்; பசைத் தன்மை.
**பிசுனம்** - பொய்; கோள்; உலோபம்; காக்கை.
**பிச்சம்** - பீலிக்குஞ்சம்; ஆண் மயிர்.
**பிச்சன்** - சிவன்; மருண்டவன்.
**பிச்சியார்** - சைவத் தவப் பெண்; கலம்பக உறுப்புளுள் ஒன்று.
**பிச்சு** - பித்தச் சொரிநீர்; பைத்தியம்.
**பிஞ்சகன்** - சங்கரிப்போன்; சிவன்.
**பிஞ்சம்** - மயிற்றோகை; இறகு.
**பிஞ்ஞகம்** - மகளிர் தலைக் கோலம்.
**பிஞ்ஞகன்** - சிவன்.
**பிஞ்ஞை** - நப்பின்னை.
**பிடகம்** - திரிபிடகம்; (பௌத்தாகமம்); பிச்சை; கூடை.
**பிடகன்** - வைத்தியன்; புத்தன்.
**பிடகை** - பூந்தட்டு.
**பிடர்** - கழுத்து.
**பிடல்** - கதவு.
**பிடவம்** - ஒரு செடி.
**பிடாகை** - உட்கிடை.
**பிடாரன்** - பாம்பு பிடிப்போன்; இசைகாரன்.
**பிடாரி** - காளி.
**பிடி** - குசை; பற்றுகை; கைப்பிடி; உறுதி; பெண் யானை.
**பிடிகை** - வண்டிவகை.
**பிடித்தல்** - கைப்பற்றுதல்; அபிநயம் செய்து காட்டுதல்; ஒட்டிக்கொள்ளுதல்; ஏற்றதாதல்.
**பிடிபாடு** - ஆதாரம்.
**பிடுகு** - இடி.
**பிட்குதல்** - கத்துதல்.
**பிட்சாடனம்** - இரப்பு.
**பிட்டன்** - மதப்புறம்பானவன்.
**பிணங்குதல்** - மாறுபடுதல்; ஊடுதல்; நெருங்குதல்.

**பிணர்** - சருச்சரை ; நால்வகை ஊறுகளுள் ஒன்று ; சுரசுரப்பு.

**பிணவல், பிணவு** - விலங்கின் பெண்; பெட்டை.

**பிணா** - பெண்.

**பிணி** - கட்டு ; நோய்; பின்னல்; துன்பம்.

**பிணிதல்** - சாதல்.

**பிணித்தல்** - சேர்த்துக்கட்டுதல், வசப்படுத்துதல்.

**பிணிப்பு** - பற்று ; பாசம்.

**பிணிமுகம்** - மயில்; கந்தனது யானை ; அன்னம்.

**பிணியகம்** - காவலிடம்.

**பிணை** - கட்டு; உத்திரவாதம்; உடன்பாடு ; பெண்மான ; பூமாலை.

**பிணைதல்** - சேர்தல் ; செறிதல்; புணர்தல்.

**பிணைத்தல்** - கட்டுதல் ; இணைத்தல்.

**பிணையல்** - மாலை.

**பிணையிலி** - பேணப்படாதோன்.

**பிண்டம்** - உருவற்ற கரு ; உடல; சோறறுத் திரள்; தொகுதி.

**பிண்டி** - மா ; வடிவம் ; அசோகம.

**பிண்டிகை** - கடிவாளம்.

**பிண்டித்தல்** - தொகுத்தல்; திரளையாக்குதல்; திரளுதல.

**பிண்டிபாலம்** - எறிபடை வகை.

**பிதக்குதல்** - நசுங்குதல்.

**பிதற்று** - அறிவில்லாப் பேச்சு; குழறுகை.

**பிதாமகன்** - பாட்டன் ; பிரமன்.

**பிதிகாரம்** - பரிகாரம்.

**பிதிர்** - துண்டம்; பொறி ; விடுகதை; சேறு ; பொடி ; தந்தை ; தென்புலத்தார் ; தேமல்; உதித்தல் ; மனங் கலங்குதல்.

**பித்தி** - சுவர் ; பங்கு.

**பித்திகை** - புத்தி; சாதி மல்லிகை; சுவர்.

**பித்து** - பைத்தியம் ; அறியாமை.

**பித்தை** - மக்கள் தலைமயிர் ; ஆண்மயிர் ; குடுமி.

**பிந்து** - துளி ; விந்து.

**பிபீலிகை** - எறும்பு.

**பிப்பலம்** - அரசு; நீர்.

**பிம்பம்** - உருவின சாயை.

**பியல்** - பிடர்.

**பிரகடனம்** - விளம்பரம்.

**பிரகரணம்** - அத்தியாயம்.

**பிரகஸ்பதி** - தேவகுரு.

**பிரகாசம்** - ஒளி.

**பிரகாரம்** - விதம்; ஒப்பு.

**பிரகிருதி** - மூலம் ; சுபாவம் ; வேறுபாடுருதது.

**பிரசங்கம்** - சொற்பொழிவு.

**பிரசண்டம்** - வலிமை ; கடுமை.

**பிரசம்** - பூந்தாது ; தேன ; வண்டு ; தேன்கூடு.

**பிரசவம்** - மகப்பேறு.

**பிரசன்னம்**-காட்சி; மகிழ்ச்சி.

**பிரசாதம்** - அனுக்கிரகம் ; கடவுட்சோறு.

**பிரசாபதி** - பிரமன்.

**பிரச்சாரம்** - பரவச்செய்கை.

**பிரசித்தம்** - வெளிப்படை; அறிவிப்பு.
**பிரசினம்** - வினு.
**பிரசுரம்** - அறிவிப்பு; நூற பதிப்பு.
**பிரசை** - குடி; சந்ததி.
**பிரடை** - முறுக்காணி.
**பிரட்டம்** - முதன்மை; தள்ளுண்கை.
**பிரணயம்** - அன்பு.
**பிரணவம்** - ஓங்கார மந்திரம்.
**பிரதட்சிணம்** - வலம் வருகை.
**பிரதமம்** - முதனமை: தொடக்கம.
**பிரதாபம்** - கீர்த்தி; வீரம.
**பிரதானம்** - தலைமை.
**பிரதானி** - மந்திரி.
**பிரதி** - ஒத்த தன்மை; பதில்.
**பிரதிகூலம்** - தீமை; தடை.
**பிரதிதானம்** - கைமமாறு.
**பிரதிதொனி** - எதிரொலி.
**பிரதிமை** - உருவம்.
**பிரதியுத்தரம்** - மறுமொழி.
**பிரதிவாதி** - எதிராளி.
**பிரதீசி** - மேறகு.
**பிரதேசம்** - இடம்.
**பிரத்தியம்** - காட்சி; நேரில் அறிவது.
**பிரத்தியட்சம்** - காட்சி.
**பிரத்தியேகம்** - தனிமை.
**பிரபஞ்சம்** - உலகம்.
**பிரபந்தம்** - நூல்.
**பிரபலம்** - வலியுள்ளது; புகழ்.
**பிரபாகரன்** - சோமன்; சூரியன; அக்கினி.
**பிரபாவம்** - கீர்த்தி; மேனமை; வலிமை,
**பிரபிதாமகன்** - கொள்பாட்டன.
**பிரபு** - சிறந்தோன்; கொடையாளி.
**பிரபுத்தன்** - விழிப்புள்ளவன்; யுவன்.
**பிரபை** - திருவாசி; ஒளி; தூக்கை.
**பிரபோதம்** - பேரறிவு.
**பிரமகத்தி** - கொலைப்பாவம்.
**பிரமசாரியம்** - ஓதல்நிலை; கலியாணமிலலா வாழ்க்கை.
**பிரமஞானம்** - கடவுளறிவு.
**பிரமதாயம்** - பார்ப்பனர்க்கு இறையிலியாகக கொடுக கும் நிலம.
**பிரமதாளம்** - சச்சரி.
**பிரமம்** - முழுமுதறபொருள்; கலக்கம; சுழல் காற்று; தவறு.
**பிரமரந்திரம்** - உச்சித் துவாரம்
**பிரமரம்** - வண்டு; அபிநய வகை.
**பிரமராக்கதன்** - பார்ப்பாரப் பேய்.
**பிரமராசனர்** - தபோதனர்.
**பிரமராயன்** - பார்ப்பன அமைசசன.
**பிரமாணம்** - அளவு; விதி; ஆணை.
**பிரமாண்டம்** - மிகப்பெரியது.
**பிரமாதம்** - அளவின் மிகக அபாயம; தவறு.
**பிரமிதி** - அளவையால் உணர்ந்த மெய்யுணர்வு.
**பிரமித்தல்** - திகைத்தல்; மயங்குதல்.
**பிரமுகம்** - சிறந்தது.

**பிரமேயம்** - நியாயமளந்தறியப்பட்டது.
**பிரமை** - மயக்கம்.
**பிரமோதம்** - பெருமகிழ்ச்சி.
**பிரயாசம்**-முயற்சி; உழைப்பு.
**பிரயோகம்** - ஏவல் ; செலுத்துகை; மருந்து.
**பிரயோசனம்** - பயன்.
**பிரலாபம்** - புலம்பல்.
**பிரவர்த்தனம்** - செய்கை.
**பிரவாகம்**-வெள்ளம்; குணம; தொழில்.
**பிரவாளம்** - பவளம்.
**பிரவிருத்தி** - முயற்சி; மலக்கழிவு.
**பிரவீணன்** - சமர்த்தன்.
**பிரவேசம்** - உட்புகுதல் ; தொடக்கம்.
**பிரளயம்** - கற்ப முடிவு ; வெள்ளம்.
**பிரளயாகலர்** - ஆணவ கன்ம மலங்களையுடைய ஆன்மாக்கள்.
**பிரகாரம்** - கோவில் சுற்றுப் பிரதேசம்; மதில்
**பிராகிருதம்** - பிரகிருதி சம்பந்தம்; வடமொழித் திரிபு.
**பிராசம்** - எழுத்தோசையொற்றுமை.
**பிராசனம்** - ஊட்டுகை ; உண்கை.
**பிராசி** - கிழக்கு ; முன்னுள்ளது.
**பிராசீனம்** - பழைமை.
**பிராட்டி** - தலைவி.
**பிராணன்** - உயிர்.
**பிராணயாமம்** - உயிர்ப்படக்கல்.
**பிராதா** - சகோதரன்; அண்ணன்.
**பிராத்தி** - பேறு ; பயன்; பிராப்தி.
**பிராந்தி** - மயக்கம்.
**பிராமி** - சரசுவதி ; எழுத்துவகை.
**பிராயச்சித்தம்** - கழுவாய்.
**பிராயம்** - நிலை; வயது.
**பிராரத்தம்** - பழவினை.
**பிரார்த்தனை**-வேண்டுகோள்.
**பிரான்** - தலைவன்.
**பிரிநிலை** - வேறுபடுத்திக் காட்டும் நிலை
**பிரியம்** - விருப்பம்; அருமை.
**பிரீதி** - விருப்பம்; அன்பு.
**பிருகுடி** - புருவம்.
**பிருடை** - சுழலாணி.
**பிருதிவி** - பூமி; மண்.
**பிருதை** - குந்திதேவி.
**பிருத்தியன்** - அடிமை.
**பிருந்தம்** - துளசி.
**பிரேதம்** - பிணம்.
**பிரேரணை** - முதலெடுத்துக் கூறல்.
**பிரை** - உறைமோர்; பயன்.
**பிலம்** - பாதாளம்; கீழறை.
**பிலிற்றுதல்** - தூவுதல்; வெளிவிடுதல்.
**பிலுக்கு** - பகட்டு.
**பில்குதல்** - சிறுதுவலை வீசுதல்; பொசிதல்; வழிதல்.
**பில்லி** - சூனியவகை ; பூனை.
**பிழக்கு** - பிழை.
**பிழம்பு** - திரட்சி; உடல் ; கொடுமை; வடிவு.
**பிழா,** **பிழார்** } -இறைகூடை; கொள்கலம்.
**பிழி** - கள்.

**பிழுக்கை** - ஆடு முதலியவற்றின மலம்.
**பிழைத்தல்** - உய்தல்; தவறுதல்; நீங்குதல்.
**பிளவை** - இராஜகட்டி; வெடிபுண்; பிளக்கப்பட்ட துண்டு.
**பிளிச்சு** - பிளப்பு.
**பிளிர்த்தல்** - கொப்பளித்தல்.
**பிளிறுதல்** - முழங்குதல்; கிண்டுதல்.
**பிளிற்றுதல்** - ஆரவாரித்தல்; வெகுளுதல்; கக்குதல்.
**பிள்ளுதல்** - பிளவுண்டாதல்; துண்டுபடுதல்; விள்ளுதல்; நொறுக்குதல்.
**பிள்ளை** - பறவைக் குஞ்சு; இளமை.
**பிள்ளைத்தமிழ்** - பிள்ளைப் பருவங் கூறும் பிரபந்தம்.
**பிறகிடுதல்** - பின்புறமணிதல; தோற்றல்; கழிதல்; பின்வாங்குதல்.
**பிறக்கம்** - ஒளி; உயர்ச்சி; குவியல்.
**பிறக்கிடுதல்** - பின்வாங்குதல்; பின்நிகழ்தல்.
**பிறக்கு** - முதுகு; பின்; அடுக்கு; வேறாக.
**பிறக்குதல்** - அடுக்குதல்.
**பிறங்கடை** - வழித்தோன்றல்.
**பிறங்கல்** - உயர்ச்சி; சிறுமலை; திரள்; பெருமை; விளக்கம்; ஒளி; அரசன்.
**பிறங்குதல்** - விளங்குதல்; உயர்தல்; சிறத்தல்; நிலைமாறுதல்; செறிதல்; பெருத்தல்; ஒலித்தல்.
**பிறந்தை** - பிறவி; பிறந்தகம்; சுபாவம்; துன்பம்.
**பிறழ்தல்** - மாறுபடுதல்; துள்ளுதல்; விளங்குதல்; முரிதல்; திகைத்தல்; நடுங்குதல்; இறந்துபடுதல்.
**பிறுண்டு** - பிறஇடம்; நகத்தாறகீறு.
**பிறிது** - வேறானது.
**பிறை** - இளஞ்சந்திரன்; மகளிர் தலையணி வகை; வளைவு.
**பிறைக்கை** - அபிநய வகை.
**பிறையிரும்பு** - அரிவாள்.
**பிறைவடம்** - சந்திரஹாரம்.
**பிற்றைநிலை** - வழிபாட்டு நிலை; பிற்பட்டநிலை.
**பினாகம்** - சிவன் வில்.
**பினாகினி** - பெண்ணையாறு.
**பின்றுதல்** - பின்னிடுதல்; மீளுதல்; மாறுபடுதல்.
**பின்றை** - பின்னுள்; பின்பு.
**பின்னகம்** - பின்னின மயிர்; குஞ்சி; பேதம்.
**பின்னலை** - வீட்டுக்கொல்லை.
**பின்னம்** - சிதைவு; கீழ்வாயிலக்கம்.
**பின்னிலை** - வழிபடல்; தாழ்ந்து நிற்றல்.
**பின்னை** - தங்கை; நப்பின்னை.
**பிக்ஷாடனம்** - பிச்சைக்காரக் கோலம்.
**பிக்ஷூ** - சந்நியாசி.
**பிக்ஷை** - பிச்சை.

## பீ

**பீக்கலாட்டம்** - தொந்தரை; தடை.
**பீசம்** - மூலம்; விதை.

பீடம் - மேடை; இருக்கை.
பீடிகை - முனிவரிருக்கை; தேர்த்தட்டு; பூந்தட்டு.
பீடிகைத்தெரு - கடைவீதி.
பீடிப்பு - துன்பம்.
பீடு - பெருமை; வலிமை; ஒப்பு.
பீடை - துன்பம்.
பீதன் - குடிப்பவன்; அஞ்சுபவன்; சூரியன்.
பீதாம்பரம் - பொன்னுடை
பீபற்சு - அருச்சுனன்.
பீமம் - அச்சம்; பருமை.
பீரம் - தாய்ப்பால்; வீரம்; பீர்க்கு.
பீரை - பீர்க்கு.
பீர் - பீர்க்கு; பசலை நிறம்; பெருக்கு; அச்சம்.
பீலி - மயிற்றோகை; சிறுசின்னம்; விசிறி; பனங்குருத்து; மதில்.
பீலிக்குஞ்சம் - அலங்காரத்தொங்கல்.
பீழித்தல் - வருத்துதல.
பீழை - துன்பம.
பீழ்தல் - பிடுங்குதல்.
பீழ் - கரு; சூல்; தானியக்கரு.
பீள் - கரு; இளங்கதிர்.
பீறல் - கிழிக்கை.
பீறுதல் - கிழிதல்; கிழித்தல்; பிளத்தல்.
பீற்றல் - கந்தை.
பீனா - கண்ணமுக்கு.
பீனசம் - மூக்கடைப்புநோய்.
பீனம் - பருமை; பெருமை.

# பு

புகடுதல் - வீசியெறிதல்.
புகட்டுதல் - ஊட்டுதல; அறிவுறுத்துதல்; உட்புகுத்துதல்.
புகரோன் - சுக்கிரன்.
புகர் - கபிலநிறம்; ஒளி; அழகு; புள்ளி; கறை; குற்றம்.
புகர்முகம் - யானை; ஒருபாணம்.
புகலி - புதுக்குடி; சீகாழி.
புகலிடம் - தஞ்சம்; இருப்பிடம்; ஊர்.
புகலுதல் - சொல்லுதல; விரும்புதல்; தெரிதல்; ஒலித்தல்; மகிழ்தல்.
புகல் - விருப்பம; கொண்டாடுகை; வெற்றி; புகழ்; புகுகை; இருப்பிடம்; துணை; சரண்; பற்றுக்கோடு; உபாயம்.
புகல்வி - விலங்கின் ஏறு.
புகல்வு - மனச்செருக்கு; விருப்பம்.
புகவு - உணவு; புகுகை; மேலேறுகை.
புகழாவாகை - அகத்தி; அகங்காரம்.
புகழ்க்கூத்து - கூத்துவகை.
புகழ்பொருள் - உபமேயம்.
புகழ்மை - புகழ்; புகழுடைமை.
புகற்சி - விருப்பம்; காதல்.
புகற்றுதல் - விரும்பச் செய்தல்.
புகா - உணவு.

**புகார்** - ஆற்றுமுகம்; கழிமுகம்; காவிரிப்பூம்பட்டினம்.
**புகுதி** - சம்பவம்; ஆழ்ந்தறியும் நுண்ணறிவு: வழி; மனேவாயில்; வருவாய்.
**புகுதுதல்** - பிரவேசித்தல்; நிகழ்தல்.
**புகை** - ஒரு யோசனை தூரம்; துக்கம்.
**புகைக்கொடி** - தூமகேது.
**புக்கில்** - தங்குமிடம்; வீடு; புகலிடம்: உடம்பு.
**புங்கம்** - உயர்ச்சி; மெல்லாடை; சிறுதுகில்; அம்பு; குவியல்.
**புங்கவம்** - இடபம்; நந்தி; உயர்ச்சி.
**புசல்** - பெருங்காற்று; குச்சுமட்டை.
**புசிப்பு** - உண்ணுகை; நுகர்ச்சி.
**புஞ்சம்** - திரட்சி; கூட்டம்.
**புஞ்சவனம்** - கருப்பச் சடங்கு.
**புஞ்சுதல்** - ஒன்று சேர்தல்.
**புடகம்** - இலைத்தொன்னை; தாமரை.
**புடம்**-எரித்துப் பக்குவப்படுத்துகை; கண்ணிமை; மூடி.
**புடவி** - பூமி.
**புடாயம்** - மாணிக்கக் குற்றவகை.
**புடை** - பக்கம்; முறை; அடித்தல்; பகுதி; ஒலி.
**புடைத்தல்** - முறத்திலிட்டுத் தட்டுதல்; அடித்தல்; துவைத்தல்; நீந்துதல்; வீங்குதல்; ஆரவாரித்தல்.
**புடைநூல்** - சார்பு நூல்.
**புடைபெயர்தல்** - வெளியேறுதல்; நிலைமாறுதல்.
**புடைப்பெண்டிர்** - வைப்பாட்டிகள்.
**புடையல்** - மாலை.
**புட்கரிணி** - தாமரைத் தடாகம்; கோவில்வாவி; பெண்யானை.
**புட்கலம்** - பூரணம்; பிச்சையுணவு; உடம்பு.
**புட்டகமண்டபம்** - கூடாரம்.
**புட்டகம்** - புடைவை.
**புட்டி** - குப்பி; சிறுபடி; பருமை; இடை.
**புட்டில்** - அமபறுத் தூணி; விரலுறை; கூடை; குதிரையுணவுகட்டுமபை; கெச்சையணி; தக்கோலக்காய்.
**புட்பகம்** - புட்பக விமானம்; குபேர விமானம்.
**புட்பகாசம்** - விமானக் கோயில்.
**புட்பம்** - மலர்; வாழை.
**புட்பவதி** - பூப்படைந்த பெண்.
**புட்பவருடம்** - மலர்மழை.
**புட்பாகன்** - திருமால்.
**புட்பாஞ்சலி** - பூ விட்டு வணங்கல்.
**புணரி** - சேர்க்கை; கடல்; அலை.
**புணரியோர்** - ஒன்று கூட்டியவர்.
**புணர்ச்சி** - சேர்க்கை; எழுத்துச் சந்தி.
**புணர்தல்** - இயைதல்; சேர்தல்; மேற்கொள்ளுதல்; ஏற்றதாதல்; கூடியதாதல்.

**புணர்த்தல்** - செய்தல்; பாகுபடுத்துதல்; கட்டுதல்; உண்டாக்குதல்.
**புணர்ப்பு** - செயல்; சூழ்ச்சி; மாயம்; நட்பு; துணை.
**புணை** - ஆதாரம்; தெப்பம்; ஒப்பு; உதவி.
**புண்** - காயம்; வடு; ஊறு; தசை.
**புண்டரம்** - நெற்றிக்குறி; கழுகு.
**புண்டரிகம்** - தாமரை; வண்டு; புலி.
**புண்டரிகன்** - திருமால்.
**புண்ணியதிசை** - வடதிசை.
**புண்ணியம்** - நல்வினை; நல்வினைப்பயன்.
**புண்ணியன்** - கடவுள்; சிவபிரான்.
**புண்ணியாக வாசனம்** - தூய்மைச்சடங்கு.
**புண்ணீர்** - இரத்தம்.
**புண்வழலை** - புணசீழ்.
**புதல்** - புதர்; தூறு; அரும்பு; புருவம.
**புதல்வன்** - மகன்; மாணாக்கன்.
**புதவம்** - வாயில; கதவு; அறுகு.
**புதவு** - வாயில்; கதவு; மதகு.
**புதற்பூ** - நிலப்பூ.
**புதன்** - வானவன்.
**புதா** - கதவு; பெருநாரை.
**புதினம்** - நூதனம்; அதிசயம்.
**புதுக்குதல்** - புதுப்பித்தல்; அலங்கரித்தல்.
**புதுக்குப்புறம்**- அறநிலையம்; புதுப்பிக்கவைத்த தருமசொத்து.
**புதுநிறை** - புதுவெள்ளம்.
**புதுமை** - அற்புதம்; அபூர்வம; பழக்கமின்மை; எழில்.
**புதுவது** - புதிது.
**புதை** - அம்புக்கட்டு; அம்புகூடு; மறைவிடம்; புதைபொருள்; உடல்.
**புதையல்** - புதைபொருள்.
**புத்தகம்** - மயிலிறகு; நூல்.
**புத்திகோசரம்** - புத்திக்குப் பொருளாவது.
**புத்திபூர்வம்** - மனமறிந்தது.
**புத்திமதி** - அறிவுறுத்துகை.
**புத்திரகாமேட்டி** - மகப்பேற்று யாகம்.
**புத்தேள்** - புதுமை; தெய்வம்; தேவர்.
**புத்தோடு** - புதுப் பானை.
**புந்தி** - மனம்; அறிவு; புதன்.
**புமான்** - ஆண்மகன்; ஆன்மா.
**புயக்கறுதல்** - வெளியேறுதல்; பசுமை யறுதல்.
**புயங்கம்** - பாம்பு.
**புயங்கன்** - சிவபிரான்.
**புயமுட்டி** - அம்பெய்யும்வகை.
**புயம்** - தோள்.
**புயலேறு** - இடி.
**புயல்** - மேகம்; கடுங்காற்று; நீர்.
**புய்தல்** - பறிக்கப்படுதல்; மறைதல்.
**புய்த்தல்** - பிடுங்குதல்; பறித்தல்; பயத்தல்.
**புரசை** - புரோசை.
**புரட்டு** - வஞ்சகம்; மாறுபட்ட பேச்சு.
**புரணம்**- அசைகை; துடிக்கை; தோன்றுகை; ஒளி; மயக்கம்.

**புரத்தல்** - காத்தல்; அருளல.
**புரந்தரன்** - இந்திரன்.
**புரம்** - ஊர்; நகரம; கோயில்; வீடு; உடல.
**புரவலன்** - அரசன்; பாது காப்பவன்; கொடையாளன.
**புரவி** - குதிரை; குதிரை, யானை கட்டுமிடம்.
**புரவு** - பாதுகாப்பு; கொடை; அரசிறை; இறையிலிநிலம; ஆறறு நீர் பாயும் வயல்; செழுமை; நிலவரி.
**புரளி** - இரத்தம்; பொய; சண்டை.
**புராணம்** - பழமை; பழங் கதை; பழைய நிகழசசி.
**புராதனம்** - பழமையானது.
**புரி** - கயிறு; முறுககு; சுருள்; யாழநரம்பு; நகர்; மருத நிலத்தூர்; உடல்; விருப் பம்; சங்கு; மாலை.
**புரிக்கூடு** - நெறகூடு.
**புரிசை** - மதில.
**புரிதல்** - தியானித்தல்; கொடுத்தல; விசாரணை செய்தல்; சொல்லுதல்; மிகு தல்; அசைதல்; விருமபுதல்; பொருள் விளங்குதல்; எப் பொழுதுமமேற்கோடல்.
**புரிப்பித்தல்** - வளைந்து திரும் பச் செய்தல.
**புரித்தல்** - நிறைத்தல; பதித் தல்; விருமபச் செய்தல.
**புரிமுகம்** - கோபுரம; சங்கு.
**புரியட்டகம்**-சூட்சும சரீரம.
**புரிவு** - அன்பு; விருப்பம்; தொழில்; தவறு; தெளிவு.
**புரீடம்** - அழுக்கு; மலம்.

**புரு** - பருமை; மிகுதி; குழந்தை.
**புருகூதன்** - இந்திரன்.
**புருடன்** - புருஷன்; ஆண் மகன்; ஆன்மா; கணவன்.
**புருவை** - ஆடு; பெண்ணாடு.
**புருஷகாரம்** - ஆண்தனமை.
**புருஷார்த்தம்** - அறம் பொரு ளினபம் வீடு.
**புரூரம்** - புருவம்.
**புரை** - உட்டுளை; குரல்வளை; விளககுமாடம; குறறம்; பொய்; இலேசு; கூறுபாடு; உயர்வு; வீடு; ஆச்சிரமம; தேவாலயம; அறை; பககம; (ஓர உவம உருபு).
**புரைசை** - புரோசை.
**புரைதல்**-ஒததல்; பொருந்து தல்; மறைத்தல; நேர்தல்; தைத்தல்.
**புரைத்தல்** - பெருமையாதல்; குறறப்படுதல; மறைவு வெளிபபடுதல; தப்புதல்.
**புரையோர்** - மெயப்பொரு ளுணர்ந்தோர்; பெரியோர்; காதல் மகளிர்.
**புரோகம்**-நாய; முனசெல்லல்.
**புரோகிதன்** - சடஙகு செய விபபோன்: ஊர்ச்சோதி டன்; இந்திரன்.
**புரோசர்** - குறுநில மன்னர்.
**புரோசு** - சடங்கு செய்விக் கும் குரு.
**புரோசை** - யானைக்கழுத்திடு கயிறு.
**புரோட்சணம்** - மந்திர நீர் தெளிக்கை.
**புரோதம்** - குதிரை மூககு.

**புரோதாயம்** - தூய்மை நீர்க் குளிக்கை.
**புரோவாதம்** - பொருளை முன்னர்க் கூறுவது.
**புலங்கொளல்** - அறிதல்.
**புலத்தகை** - ஊடல்.
**புலத்தல்** - மனமவேறுபடுதல்; துன்புறுதல; அறிவுறுத்தல்; வெறுத்தல்; ஊடல்.
**புலத்தி** - வண்ணாத்தி.
**புலத்தோர்** - ஞானியர்.
**புலநெறி வழக்கம்**-செய்யுள் வழக்கு.
**புலப்பகை** - ஐம்புலனடக்கல்.
**புலப்பம்** - பிதற்று; அலப்பு.
**புலமகள்** - கலைமகள்.
**புலமகன்** - புலமையுள்ளவன்.
**புலமங்கை** - பூமிதேவி.
**புலமை** - கல்வி; மெய்ஞ்ஞானம்.
**புலம்** - வயல்; இடம்; திசை; திக்கு; நாடு; மெய்யுணர்வு; அறிவு; துப்பு; நூல்.
**புலம்பன்** - நெய்தனிலத் தலைவன்; ஆன்மா.
**புலம்பு** - அழுகையொலி; தனிமை; பிரிவு; குற்றம்; வருத்தம்; வெறுப்பு; கடற்கரை.
**புலம்பெயர்மாக்கள்** - அயல் நாட்டினர்; கடலோடிகள்.
**புலரி** - விடியல்; சூரியன்.
**புலர்தல்** - உலர்தல்; வாடுதல்; விடிதல்; தெளிதல்; முற்றல.
**புலவல்** - வெறுப்பு.
**புலவன்** - அறிஞன; புத்தன்; ஆன்மா; புதன்; முருகன்; தேவன்.
**புலவி** - ஊடல்; வெறுப்பு.
**புலவு** - புலால; புலால் நாற்றம்; இரத்தம்.
**புலவுதல்** - புலால் நாற்றமடித்தல்; வெறுத்தல்.
**புலனுழுதுண்மார்** - கற்றோர்.
**புலன்** - அறிவு; ஐம்புலன்; காட்சி; வயல்.
**புலாகம்** - சோற்றுப்பருக்கை.
**புலால்** - ஊன்; தீநாற்றம்.
**புலிங்கம்** - தீப்பொறி.
**புலிமுகப்பு** - அரண்மனை வாயில்.
**புலை** - ஊன்; இழிவு; கீட்டு; தீயநெறி; பொய்; கீழ்மகன்; தூய்மையின்மை.
**புல்** - இரணசாதி; பனை; புல்லரிசி; இழிவு.
**புல்குதல்** - புணர்தல்; தீண்டுதல்; தழுவுதல்.
**புல்லகம்**-மகளிர் நெற்றியணி.
**புல்லணல்** - இளந்தாடி.
**புல்லம்**-எருது; வசைமொழி; பூ.
**புல்லார்** - பகைவர்.
**புல்லார்தல்** - தோல்வியுறுதல்.
**புல்லாள்** - புல்லுரு; ஆறலைகள்வன.
**புல்லி** - புறவிதழ்; பூவிதழ்.
**புல்லிகை** - கன்னசாமரை.
**புல்லிதழ்** - பூவின் புறவிதழ்.
**புல்லினம்** - ஆட்டினம்.
**புல்லுதல்** - தழுவுதல்; பொருந்துதல்; வரவேற்றல்; ஒத்திருத்தல்.
**புல்லெழுதல்** - மக்கள் நடமாட்டமினமை.
**புல்வாய்** - கலைமான்.

**புவம்** - வான்.
**புவனம்** - பூமி; உலகம்; நீர்; ஆகாயம்.
**புவன்** - இறைவன்.
**புவி** - பூமி.
**புழகு** - மலையெருக்கு.
**புழக்கம்**-பழக்கம; அறிமுகம்.
**புழங்குதல்**-கையாளுதல்.
**புழல்**-உட்டுளை; பணியாரம.
**புழல்வல்சி** - தேங்குழல்.
**புழுகு** - ஒரு மணப்பொருள்; அம்புத்தலை.
**புழுக்கம்** - துன்பம்; உஷ்ணம.
**புழுக்கல்**-அவித்தது; சோறு.
**புழுக்கு**-கும்மாயம்; இறைச்சி.
**புழுக்கை** - இழிந்தவன; அடிமை.
**புழுக்குதல்** - ஆவியெழ வேகுதல; பொருமைபபடுத்துதல்; வருத்துதல்; சினத்தல்.
**புழுதி** - காய்ந்த நிலம்.
**புழுதிபாடு** - தரிசு நிலம்.
**புழுவெட்டு** - கூந்தல் நோய் வகை.
**புழை** - துளை; சிறுவாயில்; காட்டுவழி; ஒடுக்கவழி; சாளரம்; ஏவறை; நரகம்.
**புழைக்கடை** - வீட்டுப் பின் புறம்.
**புழைத்தல்** - துளையிடுதல்.
**புளகம்** - மயிர் சிலிர்க்கை; கண்ணுடி.
**புளிஞன்** - வேடன்.
**புளிதம்** - ஒருவகை யுணவு.
**புளிந்தன்** - புளிஞன்.
**புளிமிதவை** - புளிங்கூழ்.
**புளினம்** - மணற்குன்று.
**புனைதல்** - அலங்கரிககப்படுதல்.
**புள்** - பறவை; வண்டு; நிமித்தம்; கைவளை.
**புள்ளம்** - கொடுவாள்.
**புள்ளி** - ஆய்தவெழுத்து; மெய்யெழுத்து; இமயமலை; பொட்டுககுறி.
**புள்ளுவம்** - பறவையோசை; வஞ்சகம்.
**புறகு** - புறம்பானவன்.
**புறக்கடை** - வீட்டின பின் புறம்.
**புறக்கணித்தல்** - அலட்சியஞ் செய்தல; பராமுகமாதல்.
**புறக்கரணம்** - வெளியுறுப்பு.
**புறக்கிடுதல்** - புறங்காட்டல.
**புறக்கு** - வெளிபபுறம.
**புறக்குடி** - நகர்ககு வெளியே யுள்ள ஊர.
**புறக்குடை** - முதுகு.
**புறக்கூத்து** - கூத்துவகை.
**புறக்கொடை** - புறங்காப்பு; பிரிந்தநிலை; புறமுதுகிடுகை; மெய்காவல்; கோயிலின வெளிப்புறம்.
**புறங்காடு**-இடுகாடு; சுடுகாடு.
**புறங்காத்தல்**-பாதுகாத்தல.
**புறங்கூறுதல்** - காறுவிடத்துப் பழிகூறுதல்.
**புறஞ்சிறை** - அருகிடம்; வேலிப்புறம.
**புறணி** - புறங்கூறல; மேற்பட்டை; முல்லை நிலம்.
**புறத்திணை** - அரசர் போரொழுககம்
**புறத்திறுத்தல்** - முற்றுகையிடுதல்; வெளியே காத்திருத்தல்.
**புறந்தருதல்** - பாதுகாத்தல; போற்றுதல்.

**புறப்பற்று** - எனதென்பது; மமகாரம

**புறமுழவு** - பறைவகை.

**புறம்** - புறத்திணை ; முதுகு ; பக்கம்; இறையிலி நிலம.

**புறம்பணை** - மருதநிலம் ; முல்லை குறிஞ்சி நிலங்கள்.

**புறம்பு**-வெளியிடம், முதுகு.

**புறவம்** - சிறு காடு; சீகாழி

**புறவாழி** - பெரும்புறக் கடல.

**புறவு** - புறா ; காடு; முல்லை நிலம; முல்லைக்கொடி.

**புறவுரை** - பாயிரம.

**புறனடை** - விதியில அடங்காதது.

**புறனழித்தல்** - புறங்கூறல்.

**புறனுரை** - வெறறுரை.

**புற்கம்** - புல்லறிவு; புன்மை ; குறைவு; மாயம.

**புற்கலம்** - சரீரம்; உயிரற்றது.

**புற்கலன்** - ஆன்மா.

**புற்கை** - கஞ்சி ; சோறு ; கூழ்.

**புற்புதம்** - நீர்க்குமிழி.

**புற்றுஞ்சோறு** - புற்றுக் கறையான் திரள்; பூஞ்சணம.

**புற்று** - புரைவைத்த புண.

**புனகம்** - உணவு.

**புனம்** - மலைசார் கொல்லை.

**புனலி** - மோசி மல்லிகை.

**புனல்** - நீர், ஆறு.

**புனனுடன்** - சொழன.

**புனிதம்** - தூயமை.

**புனிறு** - ஈன்றணிமை.

**புனுகு** - புழுகு.

**புனைசுருட்டு** - மோசம்.

**புனைதல்** - தரித்தல் ; அழகு செய்தல்; சிறப்பித்தல்; கற்பித்தல்; கட்டுதல்.

**புனைந்துரை** - பாயிரம்.

**புனையல்** - மாலை.

**புனையிறும்பு** - செய்காடு.

**புனைவிலி** - உவமானப் பொருள்.

**புனைவுளி** - உவமேயப் பொருள்.

**புன்கண்** - துன்பம் ; வறுமை; அச்சம; இழிவு.

**புன்கம்** - சோறு; மரவகை.

**புன்கூர்தல்** - வருந்துதல.

**புன்செய்** - கொல்லை நிலம்.

**புன்முறுவல்** - புன்சிரிப்பு.

**புன்மூரல்** - புன்சிரிப்பு.

**புன்மை** - இழிவு ; சிறுமை; துனபம்; வறுமை ; குறறம்; மங்கல.

**புன்றலை** - இளந்தலை; சிவப்பு மயிருள்ள தலை.

**புன்னம்புலரி** - வைகறை.

**புன்னாகம்** - புன்னை ; வெள்ளாமபல்.

**புன்னுநர்** - இழிவறிவாளர்.

**புன்னெறி** - தீயவழி; பொய்ச் சமயம்.

## பூ

**பூ** - மலர்; நிறம்; பொலிவு ; அழகு ; புகர் ; கூர்மை; பூமி ; தாமரை ; பட்டம் ; பிறப்பு.

**பூகண்டகர்** - அசுரர்.

**பூகதர்** - புகழ்வோர்.

**பூகம்** - கமுகு ; ஒரு சாதிக் கூட்டம; திரட்சி; இருள்; நேரம்; பிளப்பு; கமுகு.

**பூகம்பம்** - பூமியதிர்ச்சி.
**பூக்கவர்ந்துண்ணி** - குரங்கு.
**பூங்கலன்** - பூகுடலை.
**பூங்கா** - பூஞ்சோலை.
**பூசந்தி** - கடலபிரிக்கும சிறு நிலம்.
**பூசல்** - போர ; பேரொலி ; பலரறிகை; வருததம; ஒப்பனை.
**பூசறுத்தல்** - வாய முதலியன கழுவல.
**பூசனை** - நித்திய பூசை.
**பூசிதம்** - வணக்கம.
**பூசுதல்** - தடவுதல் ; கழுவுதல்; இயைதல.
**பூசுரன்** - அந்தணன.
**பூசை** - பூனை ; ஆராதனை ; கெட்டி.
**பூச்சிதம்** - மதிப்பு.
**பூச்சியம்** - நன்கு மதிப்பு ; ஒன்றுமின்மை.
**பூஞை** - பூனை.
**பூடணம்** - ஆபரணம.
**பூடு** - பூண்டு.
**பூட்கை** - மனவுறுதி ; மேறகோள்; வலிமை ; சிங்கம ; யானை.
**பூட்பி** - ஆபரணம ; உடல ; புணர்ப்பு; உறுதி; வரிவகை.
**பூட்டகம்** - வீணபெருமை ; வஞ்சகம.
**பூட்டன்** - பாட்டன தநதை.
**பூட்டை** - ஏறறமரம; இராட்டினத்தின சககரம்.
**பூணாரம்** - ஆபரணம.
**பூணி** - மாடு ; நீர்ப்பறவை வகை.
**பூணித்தல்** - தோறறுவிந்தல்; குறிபபிடுதல.
**பூணிப்பு** - ஆசை; நிர்மாணம.
**பூணுதல்** - மேறகொள்ளுதல.
**பூணூல்** - பூணுநூல.
**பூண்** - அணி ; வளையம ; கிமபுரி; கவசம.
**பூதகாலம்** - இறந்தகாலம.
**பூதசதுக்கம்** - நாறசந்தி.
**பூதசரீரம்** - நூலவுடமபு.
**பூததயை** - உயிரனபு.
**பூதநாதன்** - சிவபிரான்.
**பூதம்** - பஞ்சபூதம ; பூதகணம்; பிசாசம.
**பூதரம்** - மலை; மேரு
**பூதரோதரம்** - மலைகுகை.
**பூதி** - செலவம ; திருநீறு ; பொன.
**பூதிசாதனம்** - சிவசினனங்கள்.
**பூந்தல்** - தோன்றுதல்; மலாதல.
**பூநாகம்** - நாகபபூச்சி ; நாங்கூழ.
**பூநீர்** - உவா மண ணீர ; அரககு நீர்.
**பூநீறு** - உவாமண
**பூந்தராய்** - சீகாழி.
**பூபதி, பூபன்** - அரசன.
**பூபாலன்** - அரசன் ; வேளாளன.
**பூமன்** - பிரமன ; காமன ; அரசன; செவவாய.
**பூம்பிடகை** - பூங்கூடை.
**பூம்பொருக்கு** - பொடபு.
**பூரகம்** - மூசசை உளளிழுத்தல; நிரபபுகை.
**பூரணம்** - நிறைவு; முழுமை.
**பூரணை** - நிறைவு.

**பூரப்பாளை** - தலைக்கோலத்தின் ஓர் உறுப்பு; சபதம் செய்தல; நிரமானித்தல்.
**பூரம்** - வெள்ளம; நிறைவு; கறபூரம; பூரான்; பொன.
**பூராயம்** - ஆராயவு; இரகசியம்.
**பூரி** - மிகுதி; பொன்; குற்றம்; நாண.
**பூரிகை** - ஊதுகுழல்.
**பூரித்தல்** - நிறைதல; பூரகம் செயதல; பருதல்; பொலிதல.
**பூரிப்பு** - நிறைவு; மிக மகிழ்சசி.
**பூரிமம்** - தெருவின் சிறகு; சாந்திட்டுக் கட்டிய தொட்டி.
**பூரியர்** - கீழ்மக்கள்.
**பூருவபக்கம்** - விடயமுமபிறவுமாகச் சித்தாந்த விரோதமாய்ப் பிறரால் கூறப்பட்ட வாக்கியம.
**பூருவம்** - பழமை; கிழக்கு.
**பூரை** - போதியது; உதவாதது.
**பூர்வம்** - ஆதி; கிழக்கு; முதன்மை.
**பூர்வீகம்** - முற்காலம்.
**பூர்வோத்தரம்** - வரலாறு; வடகிழக்கு.
**பூல், பூலா** - செடிவகை.
**பூவல்**-செமமண்; பூந்திடுகை.
**பூவல்லிகொய்தல்** - பூக்கொய்தாடும மகளிர் விளையாட்டு.
**பூவன்** - பிரமன்.
**பூவாப்பூ** - பொற்பூ.
**பூவிலி** - பிறபபறறவன்.
**பூவிலை** - விலைமாதர் பெறும அற்றைக்கூலி.
**பூவை** - காயாமரம்; நாகணவாய்ப்புள்; பெண்.
**பூழி** - புழுதி; விபூதி; குழைசேறு; தூள்.
**பூழியன்** - பாண்டியன்; சேரன.
**பூழில்** - அகில்; பூமி.
**பூழை**-சிறுவாயில; துவாரம்.
**பூழ்** - காடை; கானங்கோழி; துவாரம்.
**பூழ்க்கை** - யானை.
**பூளை** - இலவு; செடிவகை; வெற்றிபபூ.
**பூனதம்** - பொன்.
**பூன்றம்** - பூர்ணம்.
**பூஷிதம்** - அலங்காரம்.

## பெ

**பெகுலம்** - பல.
**பெங்கு** - கள்; தீயொழுக்கம்.
**பெட்டகம்**-வரிசைப்பெட்டி.
**பெட்டல்** - மிக விரும்பல.
**பெட்டன்** - பொய்யன்.
**பெட்டு** - பொய; வீண் பெருமை; விருப்பம; பேணுகை.
**பெண்டு** - மனைவி; பெண்.
**பெண்ணருங்கலம்** - பெண்களிற் சிறந்தவள்.
**பெண்ணலம்** - பெண்மைக் குணம்; பெண்ணின்பம்.
**பெண்ணை** - பனை; ஓர் ஆறு.
**பெண்மை** - பெண்தன்மை; நிறை; அடக்கம; கறபு.
**பெண்வழிச்சேறல்** - மனைவி விருப்பத்தின்படி யொழுகல்.

**பெதும்பை** - பெண்.
**பெத்தகாலம்** - மலப்பிணிப்புண்டு நிற்கும காலம்.
**பெத்தம்** - பாசபந்தம்.
**பெத்தரிக்கம்** - பெருமை; கருவம்; குமப்பம்.
**பெம்மான்** - பெரியோன்; கடவுள்.
**பெயரன்** - மகன் மகன.
**பெயரேடு** - பேரேடு.
**பெயர்** - ஆள்; பொருள்; வஞ்சினம்; புகழ்; பெயர்ச்சொல்; வடிவு.
**பெயர்தல்** - போதல்; பிறழ தல்; மீளுதல்; மாறுதல்; சிதைவுறல; அசையிடுதல; விடுதல; சவித்தல்; கிளர்தல்.
**பெயர்த்தல்** - போக்குதல்; நிலைமாறச் செயதல். பிடுங்குதல; கொடுத்தல; பிரிதல. செலுத்துதல; ஒடுங்கிகொள்ளுதல.
**பெயர்போதல்** - புகழுடைதல்.
**பெயர்வழி** - ஆள்; தலைமுறை.
**பெயல்** - மழை; மேகம்.
**பெய்தல்** - இடுதல; பொழிதல்; வாாததல; இடைசெருகுதல்; பரப்புதல, அணிதல்; செறித்தல்; வீசி எறிதல்; அமைத்தல்; வரைதல்; பயனபடுத்துதல்; கட்டுதல்.
**பெய்துரை** - பாயிரம; இடைப்பெயதுரைபபது.
**பெய்வளை** - பெண்.
**பெரியதனம்** - மேட்டிமை.
**பெரியபுராணம்** - அறுபத்துமூவா வரலாறு.
**பெருகியல்** - பண்வகை.
**பெருகுதல்** - அளவு மிகுதல்; நிறைதல்; முதிர்தல; கேடுறுதல.
**பெருக்கம்** - வெள்ளம்; செல்வம்; நிறைவு.
**பெருக்குதல்** - விரியச்செய்தல்; நிரப்புதல்; தூற்றுதல்.
**பெருங்கரம்** - கோவேறு கழுதை.
**பெருங்கலம்** - பேரியாழ்.
**பெருங்காடு** - மயானம்.
**பெருங்குறிச் சபை** - ஊர்ப்பேரவை.
**பெருங்கை** - யானை.
**பெருஞ்சாய்** - பேராற்றல்.
**பெருஞ்சோறு** - அரசன் படைத்தலைவர்களுக் களிககும பெருணவு; படைவிருந்து.
**பெருநடை** - கூத்துவகை.
**பெருநம்பி** - இளவரசா பட்டபபெயர்.
**பெருநெறி** - முததி நெறி; பெருவழி.
**பெருந்தனம்** - கணிகையரில் ஒரு பிரிவினா.
**பெருந்திணை** - பொருந்தாக் காமம.
**பெருந்தேவி** - பட்டமகிஷி.
**பெருநீர்** - கடல.
**பெருப்பித்தல்** - பெரிதாக்குதல்; புனைந்து கூறுதல்.
**பெருப்பு** - பெருககை.
**பெருமங்கலம்** - வாழ்த்து.
**பெருமஞ்சிகன்** - நாவிதன.

**பெருமடை** - சோற்றுப்பலி.
**பெருமலை** - இமயம்; பனிமலை.
**பெருமிதம்** - மேம்பாடு; பேரெல்லை.
**பெரும்பிழுக்கை** - கூத்து வகை.
**பெரும்பிறிது** - இறப்பு.
**பெரும்பி** - நிலத்தின் ஆண்டு வருவாய்.
**பெரும்பின்** - மார்பணி.
**பெரும்பேது** - பெரும்பித்து; சாக்காடு
**பெரும்பொழுது** - கார் முதலிய கால வகை.
**பெருவனம்** - கடல்.
**பெறுக்கல்** - அரிசி.
**பெறுதல்** - அடைதல், பிரசவித்தல், அறிதல்.
**பெறுதி** - இலாபம்.
**பெறுத்தல்** - அடைவித்தல்.
**பெற்றம்** - பெருமை; காற்று; பசுமாடு.
**பெற்றி** - தன்மை; பெருமை; இயல்பு; நிகழ்ச்சி; பேறு; முறை.
**பெற்று** - செல்வாக்கு; எருது; அடுக்கு.

## பே

**பே** - அச்சம்; நுரை; மேகம்.
**பேஎம்** - அச்சம்; மேல்.
**பேடகம்** - துகில்வகை.
**பேடு** - அலி; காமனுடல்; ஊர், நடுவிரல்.
**பேணுதல்** - போற்றுதல்; உபசரித்தல்; ஒத்தல்; மதித்தல்.
**பேதகன்** - வேறுபட்டவன்; கலப்புச சாதியான்.
**பேதலித்தல்** - வேற்றுமைப்படுதல்; மாறுதல்; மனங் குழம்புதல்.
**பேதறுத்தல்** - கலக்கம் ஒழித்தல்.
**பேது** - உன்மத்தம்; அறியாமை; வருத்தம்; மயக்கம்.
**பேதுறவு** - மயக்கம்; துன்பம்.
**பேதை** - அறிவிலி; பெண்.
**பேம்** - அச்சம்.
**பேயமன்று** - பானசாலை.
**பேய்த்தேர்** - கானல் நீர்.
**பேரி** - முரசு.
**பேரியல்** - பெருந்தன்மை.
**போர்த்தும்** - மறுபடியும்.
**பேழை** - பெருமை; பெட்டி.
**பேழ்** - பெருமை.
**பேழ்கணித்தல்** - அஞ்சுதல்; கண் மூடுதல்; மருண்டு விழித்தல்.
**பேழ்வாய்** - பெரிய வாய்.
**பேறு** - பெறுதல்; செலவம்.
**பேனம்** - நுரை.

## பை

**பை** - பசுமை; அழகு; வலி; அரவின் படம்.
**பைங்கண்** - குளிர்ந்த கண்; பசுமை.
**பைங்கூழ்** - இளம்பயிர்; விளைநிலம்.
**பைங்கொடி** - கொடிவகை.
**பைஞ்சேறு** - சாணம்.
**பைஞ்ஞிணம்** - புதிய இறைச்சி.
**பைஞ்ஞிலம்** - மக்கட்டொகுதி; படைத்தொகுதி; பசிய நிலம்.

பைதல் - ஈரம்; துன்பம்; பசுமை.
பைந்தல் - சோபித்தல்; பசுமையாதல்; மிகுதல்; பொங்குதல்.
பைம்மறித்தல் - உட்புறத்தை வெளிப்புறமாகத் திருப்பல்; பையின் வாயை மூடுதல்.
பைய - மெல்ல.
பையாத்தல் - வருந்துதல்.
பையாப்பு - துன்பம்.
பையுள் - நோய்; துன்பம்.
பைவரல் - துயருறல்.

## பொ

பொகடி - மாதர் காதணிவகை.
பொகில் - அரும்பு.
பொகுட்டு - குமிழி; தாமரைக் கொட்டை; மலை.
பொகுவல் - ஒரு பறவை வகை.
பொக்கணம் - சோளிப்பை.
பொக்கம் - வஞ்சகம்; குற்றம்; பொலிவு; பொய்; மிகுதி.
பொக்கிஷம் - சேமித்து வைத்த திரவியம்.
பொக்கு - பொருக்கு; குற்றம்.
பொங்கடி - யானை; சிங்கம்.
பொங்கத்தம் - அபயக்குரல்.
பொங்கர் - கொம்பு; கட்டுமலை; சோலை; வாடற்பூ.
பொங்கலாடுதல் - பஞ்சு போற் பறத்தல்.
பொங்கல் - பொங்குகை; அன்னவகை; மிகுதி; உயர்ச்சி; பருமை; கள்.
பொங்கழி - தூற்றுத நெல்.
பொங்குதல் - கொதித்தல்; கொந்தளித்தல்; துள்ளுதல்; மிகுதல்; மேற்கிளர்தல்; சினத்தல்; செருக்குறுதல்; விளங்குதல்; விரைதல்; செழித்தல்.
பொசிதல் - கசிதல்; வெளியாதல்.
பொசித்தல் - புசித்தல்.
பொசுக்குதல் - சாம்பலாக எரித்தல்; வாட்டுதல்.
பொச்சம் - குற்றம்; பொய்.
பொச்சாந்தல் - மறத்தல்; இகழ்தல்.
பொச்சை - காடு; குற்றம்.
பொடிதல் - தூளாதல்; தீய்தல்; ஒளிமழுங்குதல்; கெடுதல்; வெறுத்தல்; சினத்தல்; கண்டித்தல்.
பொடித்தல் - தூளாக்குதல்; கெடுத்தல்; தோற்றுதல்; அரும்புதல்; விளங்குதல்; வெறுத்தல்; புளகித்தல்.
பொட்டணம் - சிறுமூட்டை; ஒத்தடம்.
பொட்டல் - பாழிடம்; வெளியிடம்.
பொட்டி - வெறுக்கத்தக்கவன்; வேசி.
பொட்டெழுதல் - அழிவுறுதல்
பொட்டை - குருடு; ஒரு குழூஉக்குறி.
பொதி - தொகுதி; குலை; மூட்டை; அரும்பு; உடல்; நெல்; பட்டை; நிறைவு; பிணிப்பு; முனை.
பொதிதல் - நிறைதல்; சேமித்தல்; மறைதல்; கட்டுதல்.

பொதியம் - பொதியமலை.
பொதியல் - அம்பலம்; ஒரு மலை.
பொதியறை - கீழறை; நிலவறை.
பொதிர்தல் - வீங்குதல்; நடுங்குதல்; பருத்தல்.
பொதிர்த்தல் - குத்துதல்; முரித்தல்.
பொது - சாதாரணம்; மன்று; நடுவுநிலை; சிறப்பின்மை.
பொதுக்குதல் - விலக்குதல்; மறைத்தல்; கவர்தல்.
பொதுக்கை - அபிநயவகை.
பொதுங்குதல் - வருந்துதல்.
பொதுதல் - துளைபடுதல்.
பொதுத்தல் - முள்பாய்தல்; துளைத்தல்.
பொதுமை - நன்மை.
பொதும்பர் - இளமரச்சோலை.
பொதும்பு - சோலை; குறுங்காடு; மரப்பொந்து; குகை; குழி.
பொதுவர் - இடையர்; பொதுமகளிர்; நடுவர்.
பொதுவில் - அம்பலம்.
பொதுளுதல் - நெருங்குதல்; தழைத்தல்.
பொத்தகம் - மயிலிறகு; புத்தகம்; சித்திரப் படம்.
பொத்தல் - துவாரம்; கடன்; குற்றம்.
பொத்தாறு - ஏர்க்கால்.
பொத்திரம் - எறியாயுதம்.
பொத்திலம் - மரப்பொந்து.
பொத்து - புரை; மூடுகை; பொந்து; வயிறு; தவறு.
பொத்துதல் - புதைத்தல்; வாய்மூடுதல்; மூட்டுதல்; தைத்தல்; தீமூட்டல்; மறைத்தல்; அடித்தல்; தவறுதல்; செய்தல்; நிறைத்தல்.
பொத்தை - உடம்பு; பொத்தல்.
பொந்தி - உடல்; பருமை.
பொம்மல் - பொலிவு; மிகுதி; பருமன்; கூட்டம்; பிரதிமை; சோறு; மகிழ்ச்சி.
பொய் - பொந்து; உள்ளீடில்லது.
பொய்கை - இயற்கை நீர்நிலை; கோட்டான்.
பொய்தல் - பிடுங்கப்படுதல்; துளைக்கப்படுதல்; வீழ்த்துதல்; மகளிர் விளையாட்டு; சிற்றில்.
பொய்த்தல் - தவறுதல்; கெடுதல்; வஞ்சித்தல்.
பொய்யாமொழி - மறை; திருக்குறள்.
பொரி - பொரியல்.
பொரிதல் - வறுபடுதல்; தீய்தல்; அலப்புதல்; மிகுந்து சொரிதல்.
பொரித்தல் - வறுத்தல்; குஞ்சுண்டாக்குதல்; தீய்த்தல்.
பொரியரை - பிளவுபட்டுக் கரடுமுரடான மரத்தின் அடிப்பகுதி.
பொரு - ஒத்தல்; போர் செய்தல்; தடவுதல்; பொருந்துதல்; பெருக்குதல்.
பொருக்க - விரைவாக.
பொருக்கு - பருக்கை; காய்ந்த சேற்றேடு; மரப்பட்டை; செதிள்.
பொருட்குன்று - மேருமலை.

**வலம்புரி** - வலஞ்சுழிச்சங்கு ; ஒரு தலையணிகலன்.
**வலயம்** - வட்டம்; கேயூரம்; கைவளையம் : தோட்டம் ; பாத்தி; கடல்; சுறறிடம்.
**வலவன்** - சமர்த்தன்; தேர்ப் பாகன்.
**வலவை** - வல்லவன்; நாணில்லாதவன்; வஞ்சகப்பெண்.
**வலன்** - வலப்பக்கம.
**வலாரி** - இந்திரன்.
**வலார்** - வளார்.
**வலி** - இழுத்தல்; சபதம்.
**வலிச்சல்** - வரிச்சு.
**வலிதல்** - முயலுதல்; மீறுதல்; அழுந்துதல் ; திண்ணியதாதல்.
**வலித்தல்** - நினைத்தல ; துணிதல்; வற்புறுத்தல; தோற்றுவித்தல்.
**வலியன்** - கரிக்குருவி.
**வலிமுகம்** - குரங்கு.
**வலைஞர்** - செமபடவர்.
**வல்** - திறமை; மேடு; சூதாடு கருவி; கச்சு; விரைவு.
**வல்சி** - சோறு ; உணவு ; நெல்; அரிசி.
**வல்லகி** - தளிர்; பூங்கொத்து.
**வல்லடி** - பலவந்தம் ; கொடுமை.
**வல்லபம்** - அருஞ்செயல் ; கொடுஞ்செயல்; திறமை.
**வல்லயம்** - ஒரு ஈட்டி.
**வல்லாங்கு** - வல்லமை.
**வல்லாட்டு** - குறும்பு.
**வல்லி** - கொடி ; இளம் பெண் ; அகவிதழ்.
**வல்லியம்** - புலி ; இடைச்சேரி.
**வல்லுளி** - பன்றி.
**வல்லூகம்** - கரடி ; ஆண் குரங்கு.
**வல்லேறு** - இடி.
**வல்லை** - வன்மை; பெருங்காடு.
**வல்விலங்கு** - யானை.
**வவ்வு** - கவர்கை.
**வழகு** - மென்மை.
**வழக்கழிவு** - நியாய விரோதம்.
**வழக்கு** - செய்கை ; ஈகை ; இயங்குகை; நீதி; வழக்கம்; ஒழுக்கம்; நெறி.
**வழக்காட்டு** - ஊடல்.
**வழக்காறு** - உலகில் வழங்கி வரும் வழி.
**வழங்காத்தேர்** - பேய்த்தேர்.
**வழங்குதல்** - இயங்குதல் ; செல்லுதல் ; மழை பெய்தல்; நடைபெறுதல்; கூத்தாடுதல் ; கொடுத்தல; சொல்லுதல்.
**வழலை** - ஒரு பாம்பு ; புண் வடிநீர்; கோழை.
**வழாஅது** - தவறுமல.
**வழாஅல்** - வழுக்கை.
**வழி** - இடம் ; ஏவல் ; கிளை; சுற்றம ; நெறி ; முறை ; உபாயம்; சநததி; பினபு.
**வழித்தொண்டு** - பரமபரையடிமை.
**வழிநாள்** - பின்னுள்.
**வழிபடுதல்** - பின்பற்றுதல்.
**வழிப்படுதல்** - நேர்படுதல்.
**வழிப்படுத்தல்** - சீர்திருத்துதல்.
**வழிப்புரை** - வழியிற்றங்குமிடம்.
**வழிமுறை**- கிரமம; சந்ததி.

**வழிமொழிதல்** - வழிபாடு கூறுதல்; அனுவதித்தல்.
**வழியளவை** - அனுமானப் பிரமாணம்.
**வழியிரங்குதல்** - பின் வருந்துதல்.
**வழியுரைத்தல்** - தூது சொல்லுதல்.
**வழியெஞ்சுதல்** - வமிசமற்றுப்போதல்.
**வழு** - தவறு; பழிப்புரை.
**வழுக்கு** - கொழுப்பு
**வழுதி** - பாண்டியன்.
**வழுதுணை** - கத்தரிக்காய்; கண்டங்கத்தரி.
**வழுத்தரல்** - இறந்துபோதல்.
**வழுத்துதல்** - வாழ்த்துதல்; துதிகதல்.
**வழுநீர்** - பீளை.
**வழும்பு** - குற்றம்; திங்கு; ிணம்; அழுக்கு.
**வழுவுதல்** - தப்புதல்.
**வழுவாய்** - தப்புகை; பாவம்.
**வழை** - சுரபுன்னை; புதுமை; இளமை.
**வழைச்சு** - இளமை; புதுமை.
**வளம்** - செழுமை; வருவாய்; செலவம.
**வளவன்** - சோழன; வேளாளன.
**வளா** - பரப்பு.
**வளாகம்** - இடம்; உலகம்; தேசம; திணைப்புனம்; பரப்பு.
**வளார்** - இளங்கொம்பு.
**வளாவுதல்** - சூழ்தல்; மூடுதல்; கலததல; அளவளாவுதல.
**வளி** - காறறு; உடல் வாதம்.
**வளிநிலை** - பிராணுயாமம்.
**வளிமறை** - கதவு.
**வளை** - சங்கு; கைவளை; கங்கணம்; சாமரை; குவளை.
**வளைஇ** - வளையக் கட்டி.
**வளைஇய** - சூழ்ந்த.
**வளைதடி** - ஓர் எறியாயுதம்.
**வள்** - வளம்; பெருமை; கூர்மை; கடிவாளம்; படுக்கை; வலிமை.
**வள்ளம்** - ஒரு வட்டில்; ஓர் அளவு; தொன்னை; சிறு தோணி.
**வள்ளல்** - வரையாது கொடுப்போன்.
**வள்ளன்மை** - கொடையுடைமை.
**வள்ளி** - கொடி; கைவளை; குறிஞ்சிப் பெண்; சநதிரன்.
**வள்ளித்தண்டை** - பிரப்பங் கேடகம்.
**வள்ளியன்** - கொடையாளன்.
**வள்ளுரம்** - பசுந்தரை
**வள்ளுவன்** - ஒரு சாதியான்; நிமித்திகன்.
**வள்ளுறை** - பெரிய மழைத் துளி.
**வள்ளை** - ஒரு கொடி; நெற்குத்தும பாட்டு.
**வறங்கூர்தல்** - மழை பெய்யாது போதல்.
**வறடு** - வறண்டது.
**வறத்தல்** - பெய்யா தொழிதல; காய்தல்; சுருங்குதல்.
**வறம்** - வற்றுகை; வற்கடம்; பஞ்சம் வெமமை.
**வறிது** - சிறிது; உள்ளீடற்றது; வெறுவிதானது.
**வறு** - குற்றம்.

**வறுங்கோட்டி** - அறிவிலார் கூட்டம்.
**வறை** - பொரிக்கறி.
**வற்கடம்** - வறட்சி; பஞ்சம்.
**வற்கம்** - கடிவாளம்; கலனை முதலியன.
**வற்கலை** - மரவுரி; காவித் துணி.
**வற்பம்** - பஞ்சம்; வன்மை.
**வற்புலம்** - மேட்டு நிலம்.
**வற்றம்** - கடல்நீர் வடிகை.
**வற்று** - கூடியது; (ஒரு சாரியை).
**வனசம்** - தாமரை.
**வனசரம்** - காட்டானை; காட்டுமிருகம்.
**வனசரன்** - வேடன்.
**வனப்பு** - அழகு.
**வனம்** - காடு; ஊர்சூழ் சோலை; அழகு; துளசி; காடுபடுபொருள்.
**வனருகம்** - தாமரை.
**வனிதை** - பெண்.
**வனைதல்** - உருவமைத்தல்; அலங்கரித்தல்
**வன்கண்** - கொடுமை; வீரம்.
**வன்புலம்** - முல்லை நிலம்.
**வன்மம்** - திராப்பகை; வலிமை.
**வன்மான்** - சிங்கம்.
**வன்மீகம்**-கறையான் புற்று.
**வன்றி** - பன்றி.
**வன்னம்** - நிறம்; எழுத்து; அழகு.
**வன்னி** - நெருப்பு; குதிரை; பிரமசாரி; கிளி.
**வன்னிகை** - எழுதுகோல்.
**வன்னிசகாயன்** - வாயுதேவன்.
**வன்னியன்** - தனகர்த்தன; சிற்றரசன; ஒரு சாதியாரின் பட்டப்பெயர்.
**வஸ்து** - பொருள்.
**வக்ஷம்** - மரபு.

## வா

**வாகடம்** - வைத்திய நூல்.
**வாகம்** - குதிரை; எருது.
**வாகனம்** - ஊர்தி; சீலை.
**வாகியம்** - புறத்தது.
**வாகினி** - படை; ஒரு படைத் தொகை.
**வாகு** - அழகு; ஒழுங்கு; தோள்.
**வாகை** - ஒருமரம்; வெற்றி; வெற்றிமாலை.
**வாக்கல்** - வடிக்கப்பட்ட சோறு.
**வாக்கியம்** - மேற்கோள்.
**வாக்கியை** - பார்வதி.
**வாக்கு** - திருத்தம்; வளைவு; தனமை; வாய; புகழ்ச் சொல்; பககம; செல் வாக்கு; நிறைவு.
**வாக்குதல்** - வாரத்தல.
**வாக்குத்தத்தம்** - உறுதி மொழி கூறல.
**வாக்குவாதம்** - பேச்சு த தருக்கம.
**வாங்குதல்** - வளைதல்; தழுவுதல்; இழுத்தல; கொள்ளுதல்; நீகருதல; குலைதல; குறைதல்; பின்வாங்குதல.
**வாசகம்** - பேசசு; சொற்றொடர்; வசனநடை; செய்யுள்; வாயபாடு.
**வாசம்** - இருப்பிடம; மணம்.

**வாசவன்** - இந்திரன்; பஞ்ச வாசம் விறபோன்.
**வாசனை** - நன்மணம; பறறு.
**வாசாமகோசரம்** - வாக்கிற் கெட்டாதது.
**வாசி** - வேறுபாடு ; தகுதி ; நன்னிலே; வீதம்; நாணயம் ; தன்மை; குறியீடு ; குதிரை ; வட்டம்.
**வாசிகம்** - வாக்காற் செய்யப் படுவது; செய்தி; தூது.
**வாசிகை** - மாலே.
**வாசினை** - வாசித்தல்.
**வாஞ்சை** - ஆசை; விருப்பம்.
**வாடாமாலே** - பொன்னரி மாலே.
**வாடூன்** - உப்புக்கண்டம்.
**வாடை**-வடகாற்று ; மணம்; வரிசை.
**வாட்டு** - பொரியல்.
**வாட்டுதல்** - வருத்துதல்.
**வாணன்** - வசிப்பவன.
**வாணி** - சரசுவதி; சொல் ; அம்பு.
**வாதகம்** - இடையூறு
**வாதம்** - காற்று; வாயுப் பிணிக்கூறு; தருககம்; இரச வாதம்.
**வாதனை** - துனபம்; வாசனே.
**வாதிகன்** - நறுமணங் கூட்டு வோன்.
**வாதுதல்** - அறுத்தல.
**வாதுவன்** - குதிரைப்பாகன் ; யானேபபாகன்.
**வாமம்** - அழகு; இடப்பக்கம்; தொடை.
**வாமனம்** - குறள்வடிவம் ;
**வாமன்** - அருகன்.
**வாமான்** - குதிரை.
**வாமி** - பார்வதி; துர்க்கை.
**வாயசம்** - காக்கை.
**வாயடை** - உணவு.
**வாயில்** - நுழைவாசல்; இடம்; உபாயம் ; தோழி ; தூது; பொறிபுலன்கள்.
**வாயில்விழைச்சு** - உமிழ்நீர்.
**வாயுறை** - உணவு; கவளம்; மருந்து; உறுதி மொழி ; மகளிர் காதணி.
**வாய்** - வாக்கு; இடம்; துவா ரம் ; உண்மை ; நுனி ; வாயில்; வடு ; மேற்பககம் ; மூலம்; விளிம்பு; (ஓர் உவம வுருபு.)
**வாய்தல்** - சித்தித்தல்; பெறு தல்; வாசல்.
**வாய்த்தலே** - தொடங்கு மிடம்; தலேமதகு.
**வாய்த்தல்** - சேர்தல் ; நன் கமைதல்.
**வாய்பாடு** - குறியீடு ; மரபுச் சொல்.
**வாய்ப்பகை** - பொய் குறளே வன்சொல் பயனில்சொல் ஆகியவை.
**வாய்ப்பு** - அனுகூலம்; சிறப்பு; பேறு; அழகு; செல்வம்.
**வாய்ப்புள்** - நறசெயல்; குறி.
**வாய்மலர்தல்** - பேசுதல் ; சொல்லுதல்.
**வாய்மொழி** - மெயம்மொழி.
**வாய்மை** - உண்மை; தவருச் சொல்; வலிமை.
**வாய்வாளாமை** - பேசா திருக்கை.
**வாய்வாள்** - குறி தப்பாத வாள்.

**வாய்வீடு** - வஞ்சினம்; ஆரவாரம்.
**வாய்வைத்தல்** - ஊதுதல்; சிறிது பயிலுதல்.
**வாரணம்** - சங்கு; யானை; பன்றி; மறைப்பு; கோழி; கடல்.
**வாரணன்** - கணபதி.
**வாரம்** - பக்கம்; இசைப்பாட்டு; கிழமை; குடியிறை; அன்பு; பட்சபாதம்; தடை; வரம்பு; பின்பாட்டு; மாசூற் பங்கு; மலைச்சாரல்.
**வாரி** - வருவாய்; விளைவு; மதிற்சுற்று; செண்டுவெளி; வெள்ளம்; கடல்; யானையகப்படுத்துமிடம்.
**வாரிதம்** - மேகம்; தடை.
**வாரிசம்** - உப்பு; சங்கு; தாமரை.
**வாரிதி** - கடல.
**வாரித்தல்** - தடுத்தல்; ஆணையிட்டுக கூறுதல்; நடத்துதல்.
**வாரியர்** - குதிரைப்பாகர்.
**வாருகோல்** - துடைப்பம.
**வாருதல்** - தொகுத்தல்.
**வாரை** - மூங்கில.
**வார்** - நெடுமை; கடை கயிறு; கச்சு; வரிசை; நீர்; தோலவார்.
**வார்க்குத்து** - நீர்சுழித்தோடுமிடம்.
**வார்தல்** - யாழின விரற ெருழில்; ஒழுகுதல்; உரிதல்.
**வார்த்திகம்** - கிழத்தனமை; விருத்தியுரை; காண்டிகை உரை.
**வாலதி** - வால்.
**வாலாமை** - அழுக்கு; அசுத்தம்; தீட்டு.
**வாலுகம்** - மணல்; மணற்குவியல.
**வாலுவன்** - சமைப்போன்.
**வாலை** - திராவகம் வடிக்கும பாண்டம்; பெண்.
**வால்** - இளமை; தூய்மை; பெருமை; ஒளி; வெண்மை.
**வாவல்** - வெளவால்; வயா; தாண்டுகை.
**வாவி** - நடைக்கிணறு; ஆற்றேருடை; நீர்நிலை.
**வாவுதல்** - தாவுதல்; தாண்டுதல.
**வாளம்** - வட்டம; சக்கரவாகம.
**வாளரி** - சிங்கம்.
**வாளாமை** - மெளனம்.
**வாளி** - அம்பு; வாள்வீரன்; வட்டவோட்டம்; ஒரு காதணி.
**வாளுழத்தி** - கொற்றவை; நீர்ச்சால்.
**வாள்** - ஒளி; கூர்மை; ஈர்வாள்.
**வாள்வரி** - புலி.
**வாறு** - விதம்; பேறு; வலிமை.
**வானப்பிரத்தம்** - மனைவியொடு காட்டிற றவஞ்செய்தல்.
**வானவரம்பன்** - சேரன்.
**வானவர்** - சேரர்; விண்ணிலவாழ்வோர்.
**வானவூர்தி**-ஆகாயவிமானம்.

**வானி** - கூடாரம்; மரம்; கொடி; இடிகொடி படை.
**வானிழல்** - அசரீரி.
**வான்** - ஆகாயம; மேகம்; மழை; தேவருலகு; பெருமை; அழகு; இடி; சிறப்பு.
**வான்கண்** - ஞாயிறு.
**வான்மை** - வெண்மை; தூய்மை; அழகு.
**வாஸ்தவம்** - மெய்மமை.
**வாஸ்து** - மனே.

## வி

**வி** - பறவை; விசும்பு; காற்று; அழகு; விசை; (விகுதி).
**விகங்கம்** - பறவை; காற்றுடி
**விகசிதம்** - மலர்ச்சி; விரிவு.
**விகடம்** - ஆசியம; பரப்பு; வேறுபாடு; அழகு.
**விகண்டித்தல்** - ஆட்சேபித்தல்; வேறுபடுதல.
**விகலம்** - குறைவு; சிதைவு.
**விகலே** - ஒரு நாழிகை.
**விகற்பம்** - வேறுபாடு; மனக்கோணல்.
**விகாசம்**-மலர்ச்சி; பிரகாசம்.
**விகாதம்** - இடையூறு; கேடு
**விகாரம்** - வேறுபாடு; அவலட்சணம்; பௌத்தாலயம்
**விகிர்தம்** - வேறுபாடு; அச்சம்; பொய்.
**விகிருதி** - வேறுபாடுறுவன.
**விக்கிரமம்** - வீரம; அடியெடுதது வைககை.
**விக்கினம்** - இடையூறு; தீமை.
**விக்குள்** - விக்கல்.
**விங்குதல்** - மிகுதல்; துளேத்தல்.
**விசதம்** - வெளிப்படையானது; வெண்மை; சுத்தம்.
**விசயன்** - அருச்சுனன்.
**விசயீபவ** - வெற்றியுடையவனுகுக.
**விசர்க்கம்**-இரட்டைப்புள்ளி; வடவெழுத்து; ஒழிகை.
**விசர்ச்சனம்** - வெளிப்போககுகை.
**விசாகன்** - முருகக்கடவுள்.
**விசாரம்** - கவலே; ஆராய்ச்சி.
**விசிகம்** - அம்பு; இருப்புலக்கை.
**விசிகரம்** - அலே.
**விசிட்டம்** - குணமுள்ளது; மேன்மையுள்ளது.
**விசித்தல்** - இறுகக் கட்டுதல்.
**விசிரமித்தல்** - இளேப்பாறுதல்.
**விசுத்தி** - அடிநாவிடம்; ஐயம; திருத்தம்; ஒப்பு.
**விசும்பு** - வானம.
**விசுவம்** - எல்லாம்.
**விசுவாசம்** - நம்பிக்கை; உண்மை.
**விசேடணம்** - அடைமொழி.
**விசேடம்** - மிகுதி; சிறப்பு.
**விசை** - விரைவு; தடவை; எந்திரம்; பக்கம்; வெற்றி.
**விசைத்தல்** - வீசுதல்; விரைவுபண்ணுதல்; தள்ளுதல்; சிதறுதல்.
**விச்சை** - கல்வி; அறிவு; மந்திரம்; தெரு.
**விஞ்சுதல்** - மிகுதல், மேலாதல்.

**விஞ்சை** - கலை; மாயவித்தை; மந்திரம்.
**விஞ்சையர்** - வித்தியாதரர்; புலவர்.
**விஞ்ஞாதம்** - மேலான அறிவு.
**விஞ்ஞாபனம்** - விண்ணப்பம்.
**விஞ்ஞானம்** - உண்மையறிவு.
**விஞ்ஞானகலன்** - ஆணவ மலமாத்திரமுள்ள ஆன்மா.
**விடகாரி** - விடதாரி; விஷ வயித்தியன்.
**விடக்கு** - இறைச்சி.
**விடங்கம்** - கொடுங்கை; இயற்கை லிங்கம்; நல்லுருவம்; அழகு; ஆண்மை.
**விடங்கர்** - முதலை; சிறுவழி.
**விடங்கன்** - காமுகன்; வமபன்.
**விடங்கு** - அழகு; அணி.
**விடமம்** - அழுத்தமின்மை; குறும்பு.
**விடம்பு**-உள்ளொன்று புறம் பொன்றான தன்மை.
**விடர்** - பிளப்பு; மலைக்குகை; பெருச்சாளி; காமுகர்.
**விடலி** - தூர்த்தை.
**விடலை** - திண்ணியன்; வீரன்.
**விடவி** - மரம்.
**விடன்** - வீரன்; தூர்த்தன்.
**விடுதல்** - பரத்தல்; மிகுதல்.
**விடுதோல்** - மேற்றோல.
**விடை** - ஆண்; இடபம்; இளமை; ஆட்டுக்கடா; மிகுதி; மறுமொழி.
**விடைத்தல்** - மிகுதல்; தடுத்தல; வருத்துதல்; கோபித்தல்; பிரித்தல்; குறைப்படுத்துதல்.
**விடைப்பு** - வேறுபாடு.
**விட்சேபம்** - கலக்கம்; பயம்; எறிகை.
**விட்டம்** - உத்திரம்; தேகம்; வட்டக் குறுக்களவு.
**விட்டேறு** - எறிகோல்; இகழ்ச்சிச்சொல்.
**விண்** - வானம்.
**விண்டு** - திருமால்; மேலுலகம்; ஆகாயம; மலை; மூங்கில.
**விண்டுராதன்** - பரீட்சித்து.
**விண்ணதிர்ப்பு** - இடிமுழக்கம்.
**விண்ணாணம்** - இடம்பம்; நாணம; நாகரிகம.
**விண்மணி** - சூரியன.
**விதண்டம்** - விணவாதம.
**விதறு** - கூட்டம்; வரிசை; பரப்பு.
**விதந்தல்** - மிகுதல்; சிறப்பித்துரைத்தல்
**விதரணை** - சமர்த்து; விவேகம்; கொடை; தயாளம்.
**விதலை** - பூமி; நடுககம்.
**விதவை** - சோறு; கூழ்; குழமபு; கைம்பெண்.
**விதறு** - நடுக்கம்.
**விதாரம்** - முள்ளிலவு.
**விதானம்** - மேற்கட்டி; ஏற்பாடு; ஊழ்.
**விதி** - நெறி; ஊழ்; ஆயுள்; ஆகமமுறை; பிரமன.
**விதிர்த்தல்**-நடுங்குதல்; சிதறுதல; சொரிதல்; அஞ்சுதல்.
**விது** - சந்திரன; பிரமன்.
**விதுப்பு** - நடுக்கம; விரைவு.
**விதும்புதல்** - விரைதல்; ஆசைப்படுதல்; நடுங்குதல்

**விதுவிதுப்பு** - குத்துநோய்; நடுக்கம்; ஆசை.
**விதூடகன்** - நகைச்சுவை விளைவிப்போன்.
**விதேயன்** - சொற்படி நடப்பவன்.
**வித்தகம்** - ஞானம்; சின முத்திரை; சாமர்த்தியம்; சிறந்த கைத்தொழில்; அதிசயம்.
**வித்தம்** - சூதாட்டம்; அதிசயம்; கூட்டம்; ஞானம்; பொன்; பழிப்பு.
**வித்தல்** - பரப்புதல்.
**வித்தாரம்** - விரிவு; விற்பன்னம்.
**வித்தியாதரர்** - விஞ்சையர்.
**வித்தியார்த்தி** - கற்போன்.
**வித்துரு**, **வித்துருமம்** - பவளம்.
**விநயம்** - நயமொழி; வணக்கம்; ஒழுக்கம்.
**விநியோகம்**-பிரித்து வழங்குதல்; உபயோகம்.
**விந்தம்** - செம்மணி; தாமரை; மலை; காடு; ஒரு பேரெண்.
**விந்து** - துளி; பொட்டு; சுக்கிலம்.
**விந்தை** - துர்க்கை; கல்வி; அழகு; ஆச்சரியம்.
**விபத்தி**, **விபத்து** - வேறுபாடு; அழிவு; ஆபத்து.
**விபரீதம்** - மாறுபாடு; அதிசயம்; பிரதிகூலம்.
**விபவம்** - பெருமை; வாழ்வு.
**விபாகரன்** - சூரியன்.
**விபாவரி** - இராத்திரி; பார்வதி.
**விபினம்** - காடு.
**விபு** - எங்கும் வியாபகமுற்றது; கடவுள்.
**விபுதன்** - அறிஞன்; தேவன்.
**விபுலம்** - விரிவு.
**விபூதி** - செல்வம்; திருநீறு.
**விப்பிரன்** - பிராமணன்.
**விமரிசம்** - ஆராய்ச்சி; மனனம்.
**விமலம்** - அழுக்கின்மை; தெளிவு.
**விமானம்** - ஊர்தி; தூபி; மாளிகை.
**விமோசனம்** - நீங்குகை.
**விம்மிதம்** - வியப்பு; உவகை; உடல்.
**விம்மாத்தல்**, **விம்முதல்** - தேம்பியழுதல்; வருந்துதல்; மகிழ்வுறுதல்; நிறைதல்.
**வியஞ்சனம்** - அடையாளம்; மெய்யெழுத்து.
**வியட்டி** - தனிப்பட்டது.
**வியத்தம்** - வெளிப்படை.
**வியத்தல்** - அதிசயித்தல்; பாராட்டுதல்.
**வியமம்** - பாராட்டத்தக்கது.
**வியம்**-ஏவல்; வழி; போக்கு; விரிவு.
**வியர்த்தம்** - பயனின்மை.
**வியர்ப்பு** - வியர்வை; சினம்.
**வியல்** - பெருமை; மிகுதி; பரப்பு.
**வியன்** - ஆகாசம்; பெருமை; வேறுபாடு; மிகுதி.
**வியாகரணம்** - இலக்கண நூல்.
**வியாகுலம்** - துக்கம்.

**வியாக்கியானம்** - பேருரை.
**வியாக்கிரம்** - புலி.
**வியாசம்** - கட்டுரை.
**வியாபகம்** - பரவுந்தன்மை.
**வியூகம்** - படைவகுப்பு.
**வியோகம்** - சாவு.
**வியோமம்** - ஆகாசம்
**விரகம்** - பிரிவு; காமம்.
**விரகு** - உபாயம்; சாமர்த்தியம்; உற்சாகம்; தந்திரம்; பண்ணியாரம்.
**விரசம்** - வெறுப்பு.
**விரசுதல்** - செறிதல்; பொருந்துதல்.
**விரசை** - தருப்பை; மாட்டுத் தொழுவம்.
**விரட்டுதல்** - துரத்துதல்; பயமுறுத்தல்.
**விரணம்** - புண்; காயம்; பகைமை.
**விரதம்** - நோன்பு; அருவருப்பு; ஒழிகை.
**விரத்தி** - துறவி.
**விரயம்** - மிகு செலவு.
**விரலேறு** - ஒரு தோற்கருவி.
**விரவலர்** - பகைவர்.
**விரவல்** - கலத்தல்.
**விராய்** - விறகு.
**விரிசிகை** - மாதர் இடையணி.
**விரிச்சி** - வாய்ச்சொல்.
**விரிஞ்சன்** - பிரமன்.
**விரிதல்** - வெடித்தல்.
**விரியல்** - பூமாலை; மலர்ச்சி; பரப்பு.
**விருகம்** - மிருகம்; விலங்கு; செந்நாய்.
**விருசு** - ஆகாசவாணம்.
**விருட்சம்** - மரம்.
**விருதர்** - வீரர்.
**விருதா** - வீண்.
**விருது** - கொடி; வெற்றிச் சின்னம்.
**விருத்தம்** - வட்டம்; பாவினம்; மூப்பு; வெறுப்பு; பழமை; முரண்; குற்றம்; இடையூறு.
**விருத்தாந்தம்** - வரலாறு.
**விருத்தி** - ஒழுக்கம்; தொழில்; தொண்டு; இறும்நிலம்; ஆசனம்; விவரம்; வளர்ச்சி.
**விருந்து** - புதுமை; உணவளித்து உபசரிக்கை; விருந்துண்போன்.
**விருந்தை** - துளசி.
**விருஷபம்** - இடபம்.
**விருஷ்டி** - மழை.
**விரூபம்** - விகார வுருவம்.
**விரை** - மணம்; வாசனை; கலவைச் சாந்து; தேன்.
**விரைதல்** - முற்படுதல்; வேகமாதல்; மனங்கலங்குதல்.
**விரோதம்** - மாறுபாடு.
**விலங்கு** - மிருகம்; பறவை; குன்று; குறுக்கானது; தடை.
**விலங்குநர்** - தடுப்போர்.
**விலட்சணம்** - சிறப்பியல்பு.
**விலாசம்** - விளையாட்டு; குறியீடு; அழகு.
**விலாவணை** - அழுகை.
**விலாழி** - குதிரையின் வாய் நுரை.
**விலைமகள்** - தாசி.
**விலோசனம்** - கண்; உட்கருத்து.
**விலோதம்** - மயிர்க்குழற்சி; கொடி.

**வில்** - ஒளி; அம்பெய்யுங் கருவி.
**வில்லங்கம்** - துன்பம்.
**வில்லவன்** - சேரன்; மன்மதன்.
**வில்லார்** - வேடர்.
**வில்லேப்பாடு** - அம்பு விழும் எல்லை.
**வில்லேருழவர்** - வேடர்; பாலை நிலமக்கள்.
**விவகாரம்** - வழக்கு.
**விவசாயம்** - தொழில்; முயற்சி; வேளாண்மை.
**விவஸ்தை** - ஒழுங்குமுறை; முடிவு.
**விவிதம்** - நாலுவிதம்.
**விழல்** - புல்வகை; பயனின்மை.
**விழவு** - விழா; விளையாட்டு.
**விழா** - கொண்டாட்டம்; உற்சவம்.
**விழாவணி** - விழாச்சிறப்பு; வீரர் போர்க்கோலம்.
**விழி** - கண்; மிண்டை.
**விழுக்காடு** - விதம்; பொருளின்றிக் கூட்டுஞ்சொல்.
**விழுக்கு** - நிணம்.
**விழுக்குலை** - சிறந்த குலை.
**விழுச்சீர்** - சீரிய புகழ்.
**விழுது** - கிளையிறங்கும் வேர்; வெண்ணெய்.
**விழுப்பம்** - சிறப்பு; உயர்வு.
**விழுப்பு** - கழிக்கப்படுவது; அசுத்தம்.
**விழுமம்** - சிறப்பு; இடும்பை; வருத்தம்.
**விழுமியோர்** - பெரியோர்.
**விழைச்சு** - புணர்ச்சி
**விழைதல்** - மிக விரும்புதல்; ஒத்தல்.
**விளம்பம்,**
**விளம்பனம்** } - தாமதம்
**விளரி** - இரங்கற்பண்; யாழ்.
**விளர்தல்** - வெளுத்தல்; முதிராதிருத்தல்.
**விளர்த்தல்** - வெட்குதல்; வெளுத்தல்.
**விளாகம்** - சூழிடம்; போர்க்களம்.
**விளாவுதல்** - சுற்றுதல்; கலத்தல்.
**விளி** - ஓசை; இசைப்பாட்டு; கொக்கரிப்பு; கூப்பிடு.
**விளிதல்** - சாதல்; குறைதல்; கழிதல்; கோபித்தல்; பாடுதல்; கூப்பிடுதல்; நாணமடைதல்; சொல்லுதல்.
**விளித்தல்** - அழைத்தல்; சொல்லுதல்; அழித்தல்; பேராரவாரஞ் செய்தல்.
**விளிப்பு** - ஓசை.
**விளிம்பு** - ஓரம்; கரை.
**விளிவு** - கேடு; சாவு; உறக்கம்; இடையறவு; நாணம்; பேரொலி.
**விளையுள்** - விளைச்சல்; முதிர்கை.
**விளைவு** - பயன்; கருத்தோற்றம்.
**விள்** - விள்ளுதல்; பேசுதல்.
**விறகு** - எரிகட்டை.
**விறத்தல்** - செறிதல்; வெற்றிபெறுதல்; மிகுதல்; வெருவுதல்.
**விறலி** - பாணப்பெண்.
**விறல்** - வெற்றி; வலி; பெருமை, மிகுதி.

**விறைத்தல்** - மரத்துப் போதல்; பிரமித்தல்.
**விற்கிடை** - நான்கு முழ அளவு.
**விற்பத்தி** - கல்விவனமை.
**வினயம்** - சூழ்ச்சி; கொடுஞ் செயல்; அடக்கம்.
**வினை** - ஏவல்; செயல்; ஊழ பரிகாரச்செயல்; முயற்சி; தந்திரம்.
**வினைமுதல்** - கருத்தா.
**விஷமம்** - துஷ்டச செயல; வனமம்.
**விஷயம்** - புலன்; சிறப பியலபு.
**விக்ஷேபம்** - விசுகை; திரிபு; கலககம.

## வீ

**வீ** - மரணம்; அழிவு; நீககம்; மலர்; பறவை.
**வீக்கம்** - பருமை; பெருமை.
**வீக்குதல்** - கட்டுதல்; அடக குதல்; நிறைத்தல்; வேக முறச செலுத்துதல்.
**விங்குதல்** - பூரித்தல்; ஏக்கங் கொள்ளுதல்.
**வீசம்** - $\frac{1}{16}$ பங்கு; முனை; விதை.
**வீடு** - மனை; வினைநீக்கம; மோட்சம; விடல.
**வீட்சணம்** - பார்வை.
**வீட்டுதல்** - அழித்தல; நீககு தல; கொலலுதல்.
**வீதம்** - அளவு முறை; பங்கு; அமைதி.
**விமம்** - அச்சம்; பருமன்.
**வீரட்டானம்** - வீரம விளங் கிய தலம.
**வீரதை** - வீரம.
**வீராணம்** - பெரும்பறை.
**வீவு** - அழிவு; கெடுதி.
**வீழி** - வீழிக்கனி.
**வீழில்தாழை** - தெங்கு.
**வீழ்** - விழுது.
**வீழ்தல்** - மிக விருமபல்; நீங் குதல.
**வீழ்த்தல்** - விழச்செயதல்; விருமபக கழிதல; தாழ விருத்தல.
**வீளை** - சீழ்க்கை; சத்தம்.
**வீறு** - சிறபபு; பெருமை; செழுமை. வெற்றி; பகுப்பு.
**வீறுதல்** - மேமபடுதல்; மிகு தல; கீறுதல; வெட்டுதல.
**விற்குதல்** - பிரிவுபடுதல.
**வீற்றிருத்தல்** - சிறபபோ டிருத்தல, தனிமையாயிருத் தல்; கவலையற்றிருத்தல.
**வீற்று** - கூறு; வேறுபடுகை; தனிமை.
**வீற்றும்** - மறறும.
**வீற்றுவீற்று** - வெவவேறு.

## வெ

**வெஃகல்** - பேராசை.
**வெகுளுதல்** - கோபிததல; பகைததல.
**வெக்கை** - மிகுநத சூடு; கடாவிடுகளம.
**வெங்களம்** - போரககளம.
**வெங்காரம்** - மருந்துசசரககு வகை.
**வெங்குரு** - சீகாழி.

வெஞ்சுடர் - சூரியன்.
வெடிபடுதல் - அஞ்சுதல்; பேராசையுண்டாதல.
வெட்சி - ஒரு செடி; பசு நிரை கவர்தல.
வெட்டி - பயனின்மை.
வெட்டென - கடுமையாக; கொடுமையாக
வெட்டை - மிகு வெப்பம்; வெளி.
வெண்கதிர் - சந்திரன்.
வெண்களமர் - வேளாளர்.
வெண்கை - எழிற்கை; வெறுங்கை.
வெண்டலை - தலையோடு.
வெண்டேர் - கானல்.
வெண்டோடு - பனந்தோடு.
வெண்பலி - சாம்பல; வெண்ணீறு.
வெண்பாட்டம் - கோடைமழை.
வெண்போழ் - தாழைமலா.
வெதிர் - செவிடு; மூங்கில்; நடுக்கம்.
வெதும்புதல் - வாடுதல்; கொதிதல்; சினங்கொள்ளுதல்.
வெந் - முதுகு.
வெந்தை - ஆவியில் வெந்தது; பிட்டு.
வெப்பர் - வெம்மை; சூடான உணவு.
வெப்பு - வெப்பம; கொடுமை; தொழுநோய்.
வெப்புள் - வெம்மை.
வெம்புதல் - கோபித்தல்; வாடுதல்; விரும்புதல்; ஒலித்தல்.
வெம்மை - வெப்பு; விருப்பம்.
வெயர்ப்பு - கோபம்.
வெயில் - ஒளி; சூரியன்; வெம்மை.
வெய்து - கொடியது; விரைவு; விருப்பத்தைக் கொடுப்பது; வெப்பமுள்ளது.
வெய்துயிர்த்தல் - நடுக்கமெய்துதல்; பெருமூச்சு விடுதல்.
வெய்துறுதல் - துன்புறுதல்.
வெய்யோன் - கொடியவன்; சூரியன்; விரும்பியவன்.
வெரிந் - முதுகு.
வெரு - அச்சம்.
வெருகு - காட்டுப்பூனை; மரநாய்.
வெருவந்தம் - அச்சம்.
வெருவுதல் - அஞ்சுதல்.
வெருளுதல் - மருளுதல்; அஞ்சுதல்.
வெவ்வர் - வெம்மை.
வெளிமை - புல்லறிவு.
வெளியார் - அறிவிலார்; புறம்பானவர்.
வெளில் - யானைத்தறி; அணில்; கம்பம்.
வெளிறு - பயனின்மை; உள்ளீடின்மை; வெண்மை; அறிவின்மை.
வெள்குதல் - வெட்குதல்; அஞ்சுதல்.
வெள்ளடை - வெற்றிலை.
வெள்ளணி - பிறந்த நாள் ஒப்பனை.
வெள்ளம் - கடல்; நீர்ப் பெருக்கு; ஒரு பேரெண்.

**வெள்ளாவி** - ஆடைவெளுக்கும் நீராவி

**வெள்ளி** - சுக்கிரன்.

**வெள்ளிடை** - ஆகாயம்; தெளிவு; வெளியிடம்.

**வெள்ளிலை** - வெற்றிலை.

**வெள்ளில்** - விளாமரம்; பாடை.

**வெளித்தல்** - வெளிப்படையாதல்; விடிதல்; வெண்ணிறங் கொள்ளுதல்.

**வெறி** - ஆவேசம; ஒழுங்கு; ஆடு; கள்; மணம்; வெறியாட்டு மயக்கம; முருகன் பூசை.

**வெறுக்கை** - மிகுதி; செல்வம்; பொன்.

**வெறுமனே** - சும்மா.

**வெறுமை** - ஒன்றுமின்மை; பயனின்மை; அறியாமை.

**வெற்பு** - மலை.

**வென்,**
**வென்றி** } - வெற்றி.

## வே

**வேகப்புள்** - கருடன்.

**வேகம்** - நஞ்சு; விரைவு.

**வேகர்** - தூதுவர்.

**வேகித்தல்** - விரைதல; கோபித்தல.

**வேங்கை** - புலிவகை; மரவகை; ஒரு மலை.

**வேசறவு** - மனச்சோர்வு.

**வேசா** - வேசி.

**வேட்கை** - பற்றுள்ளம்.

**வேட்கோ** - குயவன்.

**வேட்டகம்** - மனைவி பிறந்த வீடு.

**வேட்டம்** - வேட்டை.

**வேட்டல்** - யாகம்; விவாகம்; விரும்புதல

**வேட்டுவன்** - வேடன்; ஒருவகை வண்டு

**வேடு** - வரிக்கூத்துள் ஒன்று.

**வேடுபறி** - வழிப்பறி.

**வேடை** - தாகம்; காமநோய்; வெப்பம்.

**வேணவா** - வேட்கைப் பெருக்கம்.

**வேணி** - பின்னிய மயிர்; நதி; சடை.

**வேணீர்** - தாகநீக்கும் நீர்.

**வேணு** - மூங்கில்; இசைக் குழல்

**வேணுபுரம்** - சீகாழி.

**வேண்மான்** - வேளிர் குல மகன்.

**வேண்டுதல்** - விரும்புதல்.

**வேதகம்**-வேறுபாடு; பொன்னாக்கும் பொருள்; கர்ப்பூரம; தானியம்.

**வேதசிரசு** - உபநிடதம்

**வேதண்டம்** - வெள்ளிமலை; கைலாயம.

**வேதபாரகன்** - வேதம் நன்கறிந்தவன்.

**வேதமாதா** - காயத்திரி மந்திரம.

**வேதம்** - சமயமுதனூல்; மறை.

**வேதவித்து** - வேதம நன்கறிந்தவன்.

**வேதனம்** - கூலி; அறிவு.

**வேதன்,**
**வேதா** } - பிரமன்.

**வேதாங்கம்** - வேதககருவி நூல.

வேதாந்தம் - உபநிடதம்; அத்துவைதம்.
வேதாளம் - பெரும்பேய்.
வேதாளி - காளி.
வேதாளியர் - புகழ்வோர்.
வேதி - அறிந்தவன்; சடங்கு மேடை.
வேதிகை - பூசைமேடை; திண்ணை.
வேதித்தல் - பிளத்தல்; வேறுபடுத்தல்; நிறைவு தல்.
வேதியர் - வேதமறிந்த அந்தணர்.
வேதினம் - கருக்கரிவாள்.
வேது - வெம்மை; நீராவி.
வேத்தகன் - அறியத்தக்கவன்.
வேத்திரம் - பிரம்பு; அம்பு.
வேபாக்கு - வேகுகை.
வேமம் - நெசவுத் தறி.
வேமானியர் - தேவர்.
வேம்பன் - பாண்டியன்.
வேயாமாடம் - நிலாமுற்றம்.
வேய் - மூங்கில்; ஒற்றன்.
வேய்தல் - மூடுதல்; சூடுதல்; சூழ்தல்; பதித்தல்; பொருந்துதல்.
வேய்ந்துணி - ஊதுகுழல்.
வேய்வனம் - திருநெல்வேலி.
வேரம் - வெகுளி; செய்குன்று.
வேரல் - சிறு மூங்கில்.
வேரி - தேன்; கள்.
வேர்த்தல் - மனம் புழுங்கல்; வியர்வை விடுதல்.
வேர்வு - சினம்.
வேலம் - வேலமரம்.
வேலன் - முருகன்; பூசாரி.
வேலாவலயம் - கடல்; பூமி.
வேலாழி - கடல்.
வேலேறு - வேல் தைத்த புண்.
வேலை - வேளை; பொழுது; காலம்; கடல்.
வேவு - ஒற்று.
வேவை - வெந்தது.
வேழம் - கரும்பு; நாணல்; மூங்கில்; யானை.
வேழம்பம் - வஞ்சகம்; ஏளனம்.
வேழம்பர் - கழைக்கூத்தர்; விதூஷகர்.
வேளாண்மை - உபகாரம்; பயிர்த்தொழில்.
வேளிர் - குறுநிலமன்னர்.
வேள் - கலியாணம்; விருப்பம்; மன்மதன்; கந்தன்; வேளாளர் உரிமைப் பெயர்.
வேள்வி - யாகம்; பூசனை; கலியாணம்; நோன்பு; புண்ணியம்.
வேறல் - வெல்லுதல்.
வேற்கோட்டம் - முருகன் கோயில்.
வேற்றவர், வேற்றார் - பகைவர்.
வேற்றுப்புலம் - பகையிடம்.
வேனல் - வேனில்; சினம்; கானல்; கொதிப்பு.
வேனிலான் - மன்மதன்.

## வை

வை - கூர்மை; வைக்கோல்.
வைகல் - தங்குதல்; கழிகை; நாள்; வேளை.
வைகறை - விடியல்.
வைகறைப்பாணி - காலை வாத்திய வொலி.

**வைகார்ப்பு** - இடையரு ஆரவாரம்.

**வைகுசுடர்** - விடியல்வரை யெரியும் விளக்கு.

**வைகுண்டம்** - திருமாலுலகம்.

**வைகுதல்** - தங்குதல்; கழிதல்; வற்றுதல்; விடிதல்; புணர்தல்.

**வைகுறுமீன்** - விடிவெள்ளி.

**வைசயந்தி** - திருமாலணிமாலை.

**வைசித்திரி** - புதுமை.

**வைச்சிரவணன்** - குபேரன்; இராவணன்.

**வைதரணி** - எமபுரத்தாறு.

**வைதல்** - நிந்தித்தல்; சபித்தல.

**வைதவியம்** - கைம்மை.

**வைதாளி** - புகழ்ப்பாட்டு.

**வைதிகம்** - வேதநெறிப்பட்டது.

**வைதேகி** - சீதை.

**வைந்நாறு** - வைக்கோற்போர்.

**வைந்நுதி** - கூரிய நுனியை உடைய தோட்டி.

**வைபவம்** - மகிமை.

**வைபோகம்** - மகிழ்ச்சி; சீர்மை.

**வைப்பு** - சேமநிதி; புதையல்; நிலப்பகுதி; ஊர்; உலகம்; சூனியம்; செயற்கை.

**வையகம்** - பூமி; வைக்கோல் வேய்ந்த வீடு.

**வையம்** - பூமி; தேர்; ஊர்தி; இடம்; புண்ணியத்தலம்.

**வையாளி** - குதிரை செல மார்க்கம்

**வைராக்கியம்** - விடாப்பிடி; மகாவேசம்; விராசை.

**வைரியர்** - கூத்தர்; பாணர்.

**வைனதேயன்** - கருடன்.

## வெள

**வெளவுதல்** - கைப்பற்றுதல்; கவர்தல.

# தொகை அகராதி

**அகத்திணை** - (7); கைக்கிளை; குறிஞ்சி; பாலை; முல்லை; மருதம்; நெய்தல்; பெருந்திணை.

**அகத்தியர் மாணாக்கர்** - (12); செம்பூட்சேஎய்; வையாபிகர்; அதங்கோட்டாசான்; அவிநயர்; காக்கைபாடினியர்; தொல்காப்பியர்; துராலிங்கர்; வாய்ப்பியர்; பனம்பாரனார்; கழாரம்பர்; நற்றத்தர்; வாமனர்.

**அகப்பகை** - (6); காமம்; குரோதம்: உலோபம்; மோகம்; மதம்; மாற்சரியம்.

**அகிற்கூட்டு** - (5); சந்தனம்; கர்ப்பூரம்; எரிகாசு; தேன்; ஏலம.

**அக்கினி** - (3); ஆகவனீயம்; காருகப்பத்தியம்; தக்கிணாக்கினி.

**அங்கம்** (அ) - (4); தேர்; கரி; பரி; காலாள்.

(ஆ) (5); திதி; வாரம்; நட்சத்திரம். யோகம்; கரணம்.

(இ) (6); படை; குடி; கூழ்; அமைசசு; நட்பு; அரண்.

**அசுவகதி** - குதிரை நடை; (5); மல்லகதி; மயூரகதி; வானரகதி; சசகதி; சரகதி.

**அசுவினிதேவர்** - (2); தத்திரன்; நாதத்தியன்.

**அடி** - (5); குறளடி; சிந்தடி; அளவடி; நெடிலடி; கழிநெடிலடி.

**அடியவர்சாதனம்** - (3); குரு; இலிங்கம்; சங்கமம்.

**அந்தணர் தொழில்** - (6); ஓதல்; ஓதுவித்தல்; வேட்டல்; வேட்பித்தல்; ஈதல்; ஏற்றல்.

**அரசர் குலம்** - (3); சூரியகுலம்; சந்திரகுலம்; அக்கினி குலம்.

**அரசர்க்குரியன** - (10); படை; குடை; கொடி; முரசு; புரவி; களிறு; தேர்; தார்; மாலை; செங்கோல்.

**அரசர்** - (3); சேரன்; சோழன்; பாண்டியன்.

**அரசர்கொடி** - (3); சேரன் விற்கொடி; சோழன் புலிக்கொடி; பாண்டியன் மீனக்கொடி.

**அரசர்குழு** - (5); மந்திரியர்; புரோகிதர்; சேனைபதியர்; தூதர்; சாரணர்.

**அரசர்க்குத் தானை** - (6); களிறு; தேர்; பரி; வாள்; வில்; வேல்.

**அரசர்க்குத் துணைவர்** - (8); மந்திரியர்; கருமாதிகாரர்; சுற்றம; கடைகாப்பாளர்; நகரமாக்கள்; படைத்தலைவர்; இவுளி மறவர்; யானைவீரர்.

**அரசர்க் குறுதிச்சுற்றம்** - (5): நட்பாளர்; அந்தணாளர்; மடைத்தொழிலர்; மருத்துவக் கலைஞர்; நிமித்திகப் புலவர்.

**அரசர் தொழில்** - (6); ஈதல்; உலகுபுரத்தல்; ஓதல்; படைபயிறல்; பொருதல்; வேட்டல்

**அரசர்மாலை** - (3); சேரனை பனம்பூமாலை; சோழனை ஆத்திமாலை; பாண்டியனை வேப்பமாலை.

**அரண்** - (4); மலை; காடு; அகழ்; மதில்.

**அருகன்குடை** - (3); சகல பாசனம் பொறகுடை; சந்திராதித்தியம் முதத்துக்குடை; நித்திய விநோதம் இரத்தினக் குடை.

**அவத்தை** - (5); சாக்கிரம்; சொப்பனம்; சுழுத்தி; துரியம்; துரியாதிதம்.

**அளவு** - (4); எண்ணல்; எடுத்தல்; முகத்தல்; நீட்டல்.

**அறத்துவகை** - (3); ஒழுக்கம்; தண்டம்; வழக்கு.

**அறப்பகுதி** - (2); இல்லறம்; துறவறம்.

**அறம்** - (32); ஆதுலர்க்குச் சாலை; ஓதுவார்க்குணவு; அறுசமயத்தார்க் குண்டி; பசுவுக்கு வாயுறை; சிறைச்சோறு; ஐயம்; தின்பண்டம் நல்கல்; அறவைச்சோறு; மகப்பெறுவித்தல்; மகவு வளர்த்தல்; மகப்பால் வார்த்தல்; அறவைப் பிணஞ்சுடுதல்; அறவைத் தூரியம்; சுண்ணம்; நோய்க்கு மருந்து; வண்ணார்; நாவிதர்; கண்ணாடி; காதோலை; கண்மருந்து; தலைக்கெண்ணெய்; பெண்போகம்; பிறர் துயர்காத்தல்; தண்ணீர்ப் பந்தல்; மடம்; தடம்; சோலை; ஆவுரிஞ்சுதறி; விலங்கிற் குணவு; ஏறுவிடுத்தல்; விலைகொடுத்துயிர் காத்தல்; கன்னிகாதானம்.

**ஆச்சிரமம்** - (4): பிரமசரியம்; கிரகத்தம்; வானப்பிரத்தம்; சந்நியாசம்.

**ஆடவர் குணம்** - (4); அறிவு; நிறை; ஓர்ப்பு; கடைப்பிடி.

**ஆண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவம்** - (10); காப்பு; செங்கீரை; தாலம்; சப்பாணி; முத்தம்; வருகை; அம்புலி; சிறுபறை; சிறுமில் சிதைத்தல்; சிறுதேருருட்டல்.

**ஆதாரம்** - (6); மூலாதாரம்; சுவாதிட்டானம்; மணிபூரகம்; அநாகதம்; விசுத்தி; ஆஞ்ஞை.

**இசைக்கருவி** - (5); தோல்; துளை; நரம்பு; கஞ்சம்; மிடறு ஆகிய கருவிகள்.

**இடைவள்ளல்** - (7); அக்குரன்; அந்திமான்; கன்னன்; சந்தன்; சந்திமான்; சிசுபாலன்; வக்கிரன்.

**இந்திரன் மேகம்** - (7); ஆவர்த்தம்; புட்காலவர்த

தம்; சம்காரித்தம்; காள முகி; துரோணம்; நீல வரு ணம்; சம்வர்த்தம்.

**இராசி** - (12); மேடம்; இடபம; மிதுனம்; கர்க கடகம்; சிங்கம்; கன்னி; துலாம்; விருச்சிகம்; தனுசு; மகரம்; கும்பம்; மீனம.

**இருமை** - (2); இம்மை; மறுமை.

**இலக்கணம்** - (5); எழுத்து; சொல்; பொருள்; யாப்பு; அணி.

**இழிசொல்** - (4); குறளை; பொய்; கடுஞ்சொல; பய னில் சொல.

**இறைவன் தொழில்** - (5) படைத்தல; காத்தல்; அழித்தல்; மறைத்தல்; அருளல

**உடற்குறை** - (8); குறள; செவிடு; மூங்கை; கூன்; குருடு; மருள்; மா; உறுப் பிலாப்பிண்டம.

**உட்பகை** - 'அகப்பகை' பார்க்க.

**உணவுவகை** - (5); கடித் தல்; நக்கல; பருகல; விழுங் கல; மெலலல.

**உண்டிவகை** - (4); உண் ணல; தின்னல்; நக்கல்; பருகல்.

**உண்மைப்பொருள்** - (3); பதி; பசு; பாசம்.

**உபசாரம்** - (16); தவிசளித் தல்; கைகழுவ நீர்தரல; கால்கழுவ நீர்தரல்; முக குடி நீர்தரல; நீராட்டல்; ஆடைசாத்தல்; முப்புரி நூல்தரல்; தேய்வை பூசல்; மலர் சாத்தல்; மஞ்சளரிசி தூவல்; நறும்புகை காட் டல்; விளக்கிடல்; கருப்பூர மேற்றல்; அமுதமேந்தல்; அடைக்காய் தரல்; மந்திர மலரால் அருச்சித்தல்.

**உபாயம்** - (4); சாமம்; பேதம்; தானம்; தண்டம்.

**உயிர்த்தோற்றம்** - (4); கருப்பை; முட்டை; நிலம்; வியர்வை.

**உரை** - (4); கருத்துரை; பதவுரை; பொழிப்புரை; அகலவுரை.

**உரையிலக்கணம்** - (4); பதம்; பதப்பொருள்; உதா ரணம்; வினு விடை.

**உலகம்** - (5); பூமி; அந்த ரம்; சுவர்க்கம. அல்லது பூலோகம்; பாலோகம்; பாதாளலோகம.

**உலகம்** - மேல (7); பூலோ கம்; புவர்லோகம்; சுவர் லோகம்; சனலோகம்; தபோலோகம; மகாலோ கம; சத்தியலோகம். கீழ்- (7); அதலம்; விதலம்; சுதலம்; தராதலம்; மகா தலம்; இரசாதலம்; பாதா ளம்.

**உலோகம்** - (9); தமனியம்; இரும்பு; தாமிரம்; ஈயம்; வெள்ளி; பதுகம்; இரதி; நாகம்; கஞ்சம் - (5); பொன்; வெள்ளி; செம்பு; இரும்பு; ஈயம்; (7); செம் பொன்; வெண்பொன்;

கரும்பொன்; செம்பு; ஈயம்; வெண்கலம்; தரா.

**உவா** - (2) ; அமாவாசை ; பௌர்ணிமை.

**ஊழ்வகை** - (3) ; பிராரத்துவம் ; சஞ்சிதம் ; ஆகாமியம்.

**ஐங்கணை** - பஞ்சபாணம் - (5) ; தாமரை ; அசோகு ; மா ; முல்லை ; கருங்குவளை ஆகியவற்றின் மலர்கள்.

**ஐசுவரியம்** - (8) ; இராசாங்கம் ; மக்கள் ; சுற்றம் ; பொன்; மணி; நெல்; வாகனம்; அடிமை.

**ஓடவகை** - (5) ; கரிமுகவம்பி : பரிமுகவம்பி; அரிமுகவம்பி; தோணி; கப்பல்.

**கடல்** - (7) ; உவர்நீர் ; நன்னீர்; பால்; தயிர் ; நெய் ; கருப்பஞ்சாறு; தேன்.

**கடல்படுதிரவியம்** - (5) ; பவளம் ; முத்து ; சங்கு ; ஒக்கோலை; உப்பு.

**கடுகம்** - (3) ; சுக்கு; மிளகு; திப்பிலி.

**கடைவள்ளல்** - (7) பாரி ; ஆய் ; எழினி ; நள்ளி ; மலயன்; பேகன்; ஓரி.

**கணம்** - (18) ; அமரர் ; சித்தர் ; அசுரர்; தைத்தியர் ; கருடர் : கின்னரர் ; கிருதர் ; கிம்புருடர் ; காந்தருவர் ; இயக்கர் ; விஞ்சையர் ; பூதர் ; பைசாசர் ; அந்தரர்; முனிவர்; உரகர்; ஆகாயவாசிகள் ; போகபூமியர்.

**கதி** - (4) ; தேவகதி; மக்கட்கதி ; விலங்கின் கதி ; நரககதி.

**கரணம்** - (3) ; மனம் ; வாக்கு ; காயம்.

**கரணம்** - (4); மனம்; புத்தி; சித்தம்; அகங்காரம்.

**கருமேந்திரியம்** - (5) ; வாக்கு; பாதம் ; பாணி ; பாயுரு; உபத்தம்.

**கருவுளமைப்பு**-(6) ; பேறு ; இழவு ; இன்பம் ; பிணி ; மூப்பு; சாக்காடு.

**கவி** - (4) ; ஆசு ; மதுரம்; சித்திரம்; வித்தாரம்.

**கன்னிகை** - (5) ; அகலிகை; திரௌபதி; சீதை ; தாரை ; மண்டோதரி.

**காடுபடுதிரவியம்** - (5) ; அரக்கு ; இருல்; தேன் ; மயிற்பீலி ; நாவி.

**காப்பியம்** - (5) ; சீவகசிந்தாமணி; சிலப்பதிகாரம்; மணிமேகலை ; குண்டலகேசி ; வளையாபதி.

**காரணம்** - (3) ; முதற்காரணம் : துணைக்காரணம் ; நிமித்தகாரணம்.

**கிரகம்** - (9) ; ஆதித்தன் ; சோமன் ; அங்காரகன் ; புதன் ; பிரகற்பதி ; சுக்கிரன்; சனி; இராகு; கேது.

**கிரகசமித்து** - (9) ; எருக்கு ; முருக்கு ; கருங்காலி ; நாயுருவி; அரசு; அத்தி ; வன்னி; அறுகு; தருப்பை.

**கிரகதானியம்** - (9) ; கோதுமை ; பச்சரிசி ; துவரை ; பச்சைப்பயறு ;

கடலை; மொச்சை; எள்; உழுந்து; கொள்ளு.

**குணம்** - (3); சத்துவம்; இராசதம; தாமதம்.

**குரவர்** - (5); அரசன; உபாத்தியாயன்; தந்தை; தாய; மூத்தோன.

**குற்றம்** - (3); காமம்; வெகுளி; மயக்கம்.

**கூலம்** - (16); நெல்லு; புல்லு; வரகு; தினை; சாமை; இறுங்கு; தோரை; இராகி; எள்ளு; கொள்ளு; பயறு; அவரை; கடலை; துவரை; மொச்சை; உழுந்து.

**கூலம்** - (8); நெல்லு; புல்லு; வரகு; தினை; சாமை; இறுங்கு; தோரை; மூங்கில் நெல்.

**சங்கு** - (4); இடம்புரி; வலம்புரி; சலஞ்சலம்; பாஞ்சசன்னியம்.

**சந்தானகுரவர்** - (4); மெய்கண்டதேவர்; அருணந்தி சிவாசாரியர்; மறைஞான சம்பந்த சிவாசாரியர்; உமாபதி சிவாசாரியர்.

**சபை** - (5); இரத்தினசபை (திருவாலங்காடு); கனகசபை (சிதம்பரம); இரசிதசபை (மதுரை); தாமிரசபை (திருநெல்வேலி); சித்திரசபை (திருக்குற்றாலம.)

**சமயகுரவர்** - (4); திருஞானசமபந்தர்; திருநாவுக்கரசர்; சுந்தரர்; மாணிக்கவாசகர்.

**சித்தி** - (8); அணிமா; மகிமா; கரிமா; இலகிமா; பிராத்தி; பிரகாமியம்; ஈசத்துவம்; வசித்துவம்.

**சிரஞ்சீவியர்** - (7); அசுவத்தாமன்; மாபலி; வியாசன்; அனுமான்; விபீடணன்; கிருபாசாரி; பரசுராமன்.

**சிவசின்னம்** - (2); உருத்திராக்கம்; திருநீறு.

**சுடர்** (3); சூரியன்; சந்திரன்; அக்கினி.

**சுவை** - (6); கைப்பு; தித்திப்பு; புளிப்பு; உவர்ப்பு; துவர்ப்பு; கார்ப்பு.

**ஞானவகை** - (4); கேட்டல்; சிந்தித்தல்; தெளிதல்; நிட்டைகூடல்.

**தந்தையர்** - (5); பிறப்பித்தோன்; கற்பித்தோன; மணமுடிப்பித்தோன், அனனந் தந்தோன்; ஆபத்துக்குதவினோன.

**தமிழ்** - (3); இயல்; இசை; நாடகம்.

**தரு** - (5); அரிசந்தனம்; கற்பகம்; சந்தானம்; பாரிசாதம்; மந்தாரம்.

**தலைவள்ளல்** - (7); சகரன்; காரி; நளன; துந்துமாரி; நிருதி; செம்பியன்; விராடன்.

**தாது** - (7); இரதம்; இரத்தம்; சுக்கிலம்; மூளை; தசை; எலும்பு; தோல்.

**தாயார்** - (5); பாராட்டுந் தாய்; ஊட்டுந்தாய்; முலைத்

தாய்; கைத்தாய்; செவிலித்தாய்.

(5): அரசன் தேவி; குருவின் தேவி; அண்ணன் தேவி; தேவியை ஈன்றாள்; தனை ஈன்றாள்.

**திக்கு** - (8): கிழக்கு; தென்கிழக்கு; தெற்கு; தென்மேற்கு; மேற்கு; வடமேற்கு; வடக்கு; வடகிழக்கு.

**திக்குப்பாலகர்** - (8); கிழக்காதி முறையே இந்திரன்; அக்கினி; இமயன்; நிருதி; வருணன்; வாயு; குபேரன்; ஈசானன்.

**திக்குயானைகள்** - (8); கிழக்காதி முறையே ஐராவதம்; புண்டரீகம்; வாமனம்; குமுதம்; அஞ்சனம்; புட்பதந்தம்; சாருவபூமம்; சுப்பிரதீபம்.

**திணை** - (2); உயர்திணை; அஃறிணை.

**திணை** - (5); குறிஞ்சி; பாலை; முல்லை; மருதம்; நெய்தல்.

**திதி** - (15); பிரதமை; துவிதியை; திரிதியை; சதுர்த்தி; பஞ்சமி; சட்டி; சத்தமி; அட்டமி; நவமி; தசமி; ஏகாதசி; துவாதசி; திரயோதசி; சதுர்த்தசி; பௌர்ணமி அல்லது அமாவாசை.

**திருமாலாயுதம்** - (5); சக்கரம்; தனுசு; வாள்; தண்டு; சங்கம்.

**தீவு** - (7); நாவல்; இறலி; குசை; கிரவுஞ்சம்; புட்கரம்; தெங்கு; கமுகு.

**தோற்றம்** - (2); சரம்; அசரம்.

**தோற்றம்** - (4); உயிர்த்தோற்றம் பார்க்க.

**நட்சத்திரம்** - (27); அசுவினி; பரணி; கார்த்திகை; உரோகிணி; மிருகசீரிடம்; திருவாதிரை; புனர்பூசம்; பூசம்; ஆயிலியம்; மகம்; பூரம்; உத்திரம்; அத்தம்; சித்திரை; சுவாதி; விசாகம்; அனுடம்; கேட்டை; மூலம்; பூராடம்; உத்திராடம்; திருவோணம்; அவிட்டம்; சதயம்; பூரட்டாதி; உத்திரட்டாதி; ரேவதி.

**நதி** - (7); கங்கை; யமுனை; சரசுவதி; நருமதை; கோதாவரி; காவேரி; குமரி.

**நவக்கிரகம்** - 'கிரகம்' பார்க்க.

**நவதானியம்** - 'கிரகதானியம்' பார்க்க.

**நாகம்** - (8); வாசுகி; அனந்தன்; தக்கன்; சங்கபாலன்; குளிகன்; பதுமன்; மகாபதுமன்; கார்க்கோடன்.

**நாடகத்தரம்பையர்** - (4); உருப்பசி; மேனகை; அரம்பை; திலோத்தமை.

**நாடுபடுதிரவியம்** - (5); செந்நெல்; செவ்விளநீர்; சிறுபயறு; கரும்பு; வாழை.

**நாற்பொன்** - (4); ஆடகம; கிளிச்சிறை; சாதரூபம்; சாம்பூநதம்.

**நிறம்** - 'வண்ணம' பார்க்க.

**நூல்** - (3); முதனூல்; வழிநூல்; சார்பு நூல.

**நாற்பயன்** - (4); அறம; பொருள்; இன்பம்; வீடு.

**பஞ்சதிராவிடம்** - (5); திராவிடம; ஆந்திரம; கன்னடம்; மகாராட்டிரம்; கூர்ச்சரம.

**பஞ்சபூதம்** - (5); பிருதிவி; அப்பு; தேயு; வாயு; ஆகாயம் அல்லது நிலம; நீர், தீ; கால; வான.

**பஞ்சவாசம்** - (5); இலவங்கம்; ஏலம; காப்பூரம சாதிககாய; தககோலம்.

**பஞ்சமூலம்** - (5); செவவியம்; சிததிரமூலம; கண்டு பரஙகி; பேரரத்தை; சுக்கு.

**பண்** - (4); பாலை; குறிஞ்சி; மருதம; செவவழி.

**பதவி** - (4); சாலோகம; சாமீபம; சாரூபம்; சாயுச்சியம.

**பதினெண்சித்தர்** - (18); திருமூலர்; இராமதேவர்; கும்பமுனி; இடைக்காடர்; தன்வந்திரி; வால்மீகி; கமலமுனி; போகநாதர்; மச்சமுனி; கொங்கணர்; பதஞ்சலி; நந்திதேவர்; போதகுரு; பாமபாட்டி; சட்டைமுனி; சுந்தரானந்த தேவர்; குதம்பைச்சித்தர்; கோரக்கா.

**பருவகாலம்** - (6); கார்; கூதிர்; முன்பனி; பின்பனி; இளவேனில்; முதுவேனில்.

**பருவம்** - (7); பேதை; (5-7); பெதும்மை (8-11); மங்கை; (12-13); மடந்தை (14-19); அரிவை (20-25); தெரிவை (26-31); பேரிளம்பெண்; (32-40).

**பழம்** - (3); மா; பலா; வாழை.

**பா** - (4); வெண்பா; ஆசிரியப்பா; கலிப்பா; வஞ்சிப்பா.

**பாதகம்** - (5); கொலை; பொய; களவு; கள்; குருநிந்தை.

**பாவினம்** - (3); தாழிசை; துறை; விருத்தம.

**புண்ணியம்** - (4); தானம்; கல்வி; தவம்; ஒழுக்கம்.

**புரி** - (7); அயோத்தி; மதுரை; மாயை; காசி; காஞ்சி; அவந்தி; துவாரகை.

**புருடார்த்தம்** - (4); அறம; பொருள்; இன்பம்; வீடு.

**புலன்** - (5); சுவை; ஒளி; ஊறு; ஓசை; நாற்றம்.

**பூ** - (4); கொடிப்பூ; கோட்டுப்பூ; நீர்ப்பூ; நிலப்பூ.

**பூதம்** - (5); நிலம்; நீர்; தீ; காறறு; விசும்பு.

**பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவம்** - (10); காப்பு; செங்கீரை; தால்; சப்பாணி, முத்தம்; வாரானை;

அம்புலி; கழங்கு; அம்மானை; ஊசல்.

**பேறு** - (16); புகழ்; கலவி; வலி; வெற்றி; நன்மக்கள்; பொன்; நெல்; நல்லூழ்; நுகர்ச்சி; அறிவு; அழகு; பொறுமை; இளமை; துணிவு; நோயின்மை; வாழ்நாள்.

**பொருள்** - (2); கல்விப் பொருள்; செலவப் பொருள்.

**பொருள்** - (4); அறம; பொருள்; இன்பம்; வீடு.

**பொழுது** - (அ); சிறுபொழுது (6); மாலை; யாமம்; வைகறை; விடியல; நண்பகல்; எறபாடு.

(ஆ) பெரும்பொழுது (6); கார; கூதிர்; முன்பனி; பின்பனி; இளவேனில்; முதுவேனில்.

**பொறி** - (5); மெய்; வாய்; கண்; மூககு; செவி.

**போகம்** - (8); பெண்; ஆடை; அணிகலன்; போசனம்; தாமபூலம்; பரிமளம; பாட்டு; பூவமளி.

**மங்கலம்** - (8); சாமரம; நிறைகுடம்; கணணாடி; தோட்டி; முரசு; விளககு; கொடி; இணைக்கயல்.

**மணம்** - (8); பிரமம்; பிரசாபத்தியம; ஆரிடம்; தெயவம; காந்தருவம்; அசுரம்; இராக்கதம்; பைசாசம்.

**மணி** - (9); கோமேதகம்; நீலம்; பவளம்; புட்பராகம்; மரகதம்; மாணிககம்; முத்து; வைடூரியம; வைரம்.

**மண்டலம்** - (7); வாயு; வருணன; சநதிரன்; சூரியன; நட்சத்திரம்; அகினி; திரிசங்கு.

**மலம்** - (3); ஆணவம்; மாயை; கன்மம.

**மலைபடுதிரவியம்** - (5); அகில்; குங்குமம; கோட்டம்; தககோலம; மிளகு.

**மாதர்கள்** - (7); அபிராமி; மகேசுவரி; கௌமாரி; நாராயணி; வராகி; இந்திராணி; காளி.

**முத்துச்சனிக்குமிடம்**; (20); மதி; மேகம்; சங்கு; சிப்பி; மீன்; நந்து; முதலை; உடும்பு; தாமரை; வாழை; கமுகு; கருமபு; செநநெல்; மூங்கில்; யானைக்கொம்பு; பனறிக்கொமபு; பசுவின பல; நாகம; கொககு; நங்கையர் கழுத்து.

**மும்மை** - (3); இமமை; மறுமை; உம்மை.

**முரசு**-(3); வீரம; கொடை; மணம.

**முனிவர்** - (7); அத்திரி; ஆஙகிரசன்; கௌதமன; சமதக்கினி; பரத்துவாசன; வசிட்டன; விசுவாமித்திரன; அல்லது அகததியன; ஆஙகிரசன; கௌதமன; காசிபன; புலத்தியன; மார்க்கணடன; வசிட்டன.

**மூலம்** - (5); (அ) கண்டங்கத்தரிவேர்; சிறுமலலிவேர்; பெருமலலிவேர்;

சிறுவழுதுணை வேர்; நெருஞ்சிவேர்—இவை சிறு பஞ்சமூலம்.

(ஆ) வில்வவேர்; பெருங் குமிழம்வேர்; தழுதாழை வேர்; பாதிரிவேர்; வாகை வேர்—இவை பெரும் பஞ்ச மூலம்.

**யாழ்வகை** - (4); பேரி யாழ்; சகோடயாழ்; மகர யாழ்; செங்கோட்டியாழ்.

**யுகம்** - (4); கிரேதயுகம்; திரேதயுகம; துவாபர யுகம்; கலியுகம்.

**வசுக்கள்** - (8); அனலன; அனிலன்; ஆபச்சைவன்; சோமன்; தரன்; துருவன்; பிரத்தியூசன்; பிரபாசன்.

**வண்டுவகை** - (4); சுரும்பு; தேன்; ஞிமிறு; வண்டு.

**வண்ணம்** - (5); வெண்மை; கருமை; செம்மை; பொன்மை; பசுமை.

**வருணம்** - (4); பிரம; க்ஷத்திரிய; வைசிய; சூத்திர.

**வழக்கு** - (2); உலகவழக்கு; செய்யுள் வழக்கு.

**வள்ளல்** - (21); தலை; இடை; கடைவள்ளல பார்க்க.

**வாயில்** - (9); கண்கள்; காதுகள்; மூக்குப் புழைகள்; வாய்; குதம; குயயம்.

**விரை** - (5); கோட்டம்; துருக்கம்; தகரம்; அகில்; சந்தனம்.

**வினை** - (2); நல்வினை; தீவினை.

**வேதம்** - (4); இருக்கு; யசுர்; சாமம்; அதர்வணம்.

**வேதாங்கம்** - (6); சிட்சை; வியாகரணம்; சந்தசு; நிருத்தம்; சோதிடம்; கற்பம.

**வைசியர்** - (3); தனவைசியர்; பூவைசியர்; கோவைசியர்.

---

